"லங்கர்" மார்க்

வாசனை பாக்குத்தூள்




★

அசல்

பாதாம் எண்ணை

★

ரோஜாப்பூ

குல்கந்து

★

ரஸிக்லால் & கோ.,

கோவிந்தப்ப நாய்க்கன் தெரு

மதராஸ் - 1

இந்தியாவின் புகழ்




லோத்ரா

கர்பாசய ரோக நிவாரணி

கேஸரி குடீரம் லிட்., மதராஸ்

EASTERNS 394

ஒரிஸ்ஸா, நிஜாம் ஸமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு, முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :

சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்

பேஜாம்பூர் - செகந்திராபாத்

பெஜவாடா - மதுரை

# அறிவிப்பு

எமது டாக்டர், குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி நிபுணர், கீழ்க்கண்ட இடங்களுக்கு குறிப்பிட்டுள்ள தேதிகளில் விஜயம் செய்கிறார். வேண்டுவோர் அவசியம் நேரிடக் கண்டு யோசனைகள் கேட்டுக் கொள்ளலாம்.

•

**ஆலோசனை நேரம் காலை 9 மணி முதல் 11 வரை**
**மாலை 3 மணி முதல் 5 மணி வரை**

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| மன்னார்குடி | 8 - 3 - 48 | மெஸர்ஸ். மாடர்ன் பார்மஸி, கெமிஸ்டுகள். |
| திருத்துறைப்பூண்டி | 9 - 3 - 48 | மெஸர்ஸ். கிருஷ்ண மூர்த்தி ஐயர் & சன்ஸ். |
| பட்டுக்கோட்டை | 10 - 3 - 48 | ஸ்ரீ வி. ஜகதீச ஐயர். |
| தஞ்சாவூர் | 11,12 - 3 - 48 | ராஜா சத்திரம். |
| நாகப்பட்டிணம் | 13 - 3 - 48 | மெஸர்ஸ். எஸ். டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்ஸ், கெமிஸ்டுகள். |
| சீர்காழி | 16 - 3 - 48 | டாக்டர் ஆர். சபேசய்யர். |
| காஞ்சிபுரம் | 20 - 3 - 48 | டாக்டர் டி. கே. நடேசன் சாலைத்தெரு, பெரிய காஞ்சிபுரம். |
| திண்டிவனம் | 24 - 3 - 48 | மெஸர்ஸ். சுந்தரா & கோ., கெமிஸ்டுகள் (மாலை 2 முதல் 5 மணி வரை) |
| விழுப்புரம் | 25 - 3 - 48 | ஸ்ரீ சி. குபேந்திர செட்டி, ஜெனரல் மர்ச்செண்ட். |
| திருவண்ணாமலை | 26 - 3 - 48 | ஸ்ரீ எஸ். வாமதேவ சாஸ்திரி, ஸ்கூல் ஏஜெண்டு, 23. ஐயங்குளத் தெரு மாலை 2 முதல் 5 மணி வரை. |
| வேலூர் | 27 - 3 - 48 | மெஸர்ஸ். வி. பி. சியர் & கோ., கெமிஸ்டுகள், லாங் பஜார். |

•

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு
**ஜம்பியின் "லிவர்க்யூர்"**
**ஜம்பி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்**
மதராஸ், திருச்சி — மற்றும் பிராஞ்சுகள்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 | இதழ் 32 — மார்ச்சு 7 — சர்வஜித்து ௵ மாசி 24



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

"கோபு எங்கே?" "கோபுவை ஏன் அழைத்து வரவில்லை?" "உனக்கு வர முடியாவிட்டாலும் கோபுவை அனுப்புவதுதானே?" என்றெல்லாம் புது டில்லியில் தங்கியிருந்தபோது காந்தியடிகள் அடிக்கடி கேட்பது வழக்கமாம். அவ்விதம் உலக சிரேஷ்டரின் உள்ளங் கவர்ந்த அருமைப் பிள்ளை இதோ நமது அட்டைப் படத்தில் தோன்றுகிறான்.

மகாத்மா அமர வாழ்வடைந்து ஒரு வாரத்திற்குப் பிறகு ஸ்ரீ தேவதாஸ் காந்தி ரேடியோவில் பேசினார். "என் தந்தை என்பதற்காக நான் காந்திஜியிடம் அதிக உரிமை கொண்டாடியதில்லை. உங்கள் எல்லோரையும் போலவே நானும் தேசத்தின் பிதாவை இழந்து விட்டதற்காகத் துக்கிக்கிறேன்! பாபுவின் இருதயத்தில் எனக்குச் சிறிதளவு இருந்த இடத்தையும் கோபு கவர்ந்து விட்டான். கோபுவுடன் சிநேகமான பிறகு பாபு என்னைப் பற்றி விசாரிப்பதே இல்லை. பிரதி தினமும் 'கோபு எங்கே?' என்று தான் கேட்பார்" என்று ஸ்ரீ தேவதாஸ் காந்தி தெரிவித்தார். பாபுவின் அருமைப் பேரனான அந்தக் கோபுதான் பாட்டனாரின் மோகனப் புன்சிரிப்புடன் இதோ காட்சி தருகிறான்.




காந்திஜியின் அஸ்தியுடன் சென்ற ஸ்பெஷல் ரயிலில் ஸ்ரீ தேவதாஸ் தம்பதிகளுடன் அவருடைய கடைசிப் புதல்வன் கோபுவும் சென்றான். ஒவ்வொரு ஸ்டேஷனிலும் வண்டி நின்றதும் ஜனங்கள் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று வானளாவும்படி கோஷித்ததைக் கேட்டான். வண்டி நகர ஆரம்பித்ததும் கோபு தனித்த மழலைக் குரலில் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று கோஷித்ததைக் கேட்டவர்களின் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. இம்மாதிரி பல ஸ்டேஷன்களில் நடந்த பிறகு கோபு பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்துச் சொன்னான்:—"இவ்வளவு ஜனங்கள் 'மகாத்மா காந்திக்கு ஜே!' என்று கோஷிக்கிறார்களே? இதைக் கேட்டு பாபுஜி திரும்பி வந்துவிடுவார் அல்லவா!"

இந்தக் கேள்வி காதில் விழுந்தவர்களின் நெஞ்சு உடைந்தது.

இந்திய தேசத்தின் இரு பெரும் பரம்பரைகளில் வந்த இந்தத் தவக் குழந்தை சிரஞ்சீவியாயிருக்கட்டும். பாபுவின் அஸ்தி சென்ற ரயிலில் தானும் கூடச்சென்ற கதையைத் தன்னுடைய பேரப்பிள்ளைகளுக்கு எடுத்துச்சொல்லும் பிராயம் வரையில் வாழ்ந்திருக்கட்டும்.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 32

# என்ன சேதி?

## சிறுகதைப் போட்டி

நமது 1947-ப் வருஷத்துச் சிறுகதைப் போட்டியின் முடிவைப் பற்றிப் பல நேயர்கள் எழுதிக் கேட்டிருக்கிறார்கள். சிறிது பொறுமையைக் கடைப்பிடிக்க வேணுமென்று அவர்களை வேண்டிக் கொள்கிறோம். 1947-ம் வருஷத்துப் போட்டிக்கு இதுவரையில் நடத்திய எந்தச் சிறுகதைப் போட்டியையும் விட அதிகமான கதைகள் (1677 கதைகள்) வந்தன. ஆகையால் பஞ்சாயத்தார் அவற்றைப் பரிசீலனை செய்வதற்குக் காலம் அதிகம் ஆகிறது. எனினும் பரிசீலனையைத் துரிதப்படுத்திக் கூடிய விரைவில் முடிவை வெளியிடப் பிரயத்தனப்படுகிறோம்.

## பர்மா நாட்டின் கதை!

பரமசிவனிடமிருந்து வரம் வாங்கிய ஓர் அசுரன் முதல் வேலையாக அவருடைய தலையிலேயே கையை வைத்து அவரை ஒழிக்கப் பார்த்தானாம்! பர்மா நாட்டின் போக்கும் இன்று அப்படித்தான் இருக்கிறது. பர்மா சுதந்திரம் பெறுவதற்கு முக்கிய காரணம் இந்தியாதான். இந்தியா சுதந்திரம் பெற்றிராவிடில் பர்மாவுக்கும் சுதந்திரம் கிடைத்திராது. முன்னர் இந்தியா சுதந்திரத்தை இழந்ததும் பர்மாவினால் தன் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை. அப்படியிருக்க, இப்போது சுதந்திரம் பெற்றுள்ள பர்மா முதல் வேலையாக அந்த நாட்டிலுள்ள இந்தியர்களின் தலையிலே கையை வைக்க ஆரம்பித்திருக்கிறது!

காடு மேடுமாகக் கிடந்த பர்மாவைப் பண்படுத்திய பெருமையில் இந்தியர்களுக்குத்தான் அதிகமான பங்கு உண்டு. சென்ற பல தலைமுறைகளாக இந்திய செல்வந்தர்களின் மூலதனம், இந்தியத் தொழிலாளர்களின் உழைப்பு இந்திய உத்தியோகஸ்தர்களின் அறிவு இவையெல்லாம் பர்மாவின் சுபிட்சத்துக்காக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியர்களின் மூலதனத்தையும் உழைப்பையும் கொண்டு அங்கு சுமார் ஒரு கோடி ஏக்கர் விளைநிலமுள்ள காடுகள் அழிக்கப்பட்டு வேளாண்மைக்கு உகந்ததாகச் சீர்படுத்தப்பட்டன. அந்த நிலங்களில் பெரும் பகுதியையும் பின்னர் பர்மியர்கள் விலைகொடுத்து வாங்கிக் கொண்டு விட்டார்கள். இப்போது மீதி இருபது அல்லது இருபத்தைந்து லட்சம் ஏக்கர் நிலங்கள் இந்தியர்களுக்குச் சொந்தமாக இருந்து வருகின்றன.

## பாதுகாப்பு ஏற்படுமா?

பர்மாவில் சமீபத்தில் நிறைவேறியுள்ள அவசரச் சட்டமானது எவ்வித ஈடுமின்றி மேற்படி நிலங்களை இந்தியர்களிடமிருந்து பறிமுதல் செய்ய பர்மா சர்க்காருக்கு அதிகாரம் அளிக்கிறது! அதாவது அந்தச் சட்டத்தின்படி விதிக்கப்படும் நிபந்தனைகள், இந்தியர்கள் தாங்களாகவே தங்களுடைய நிலங்களை விட்டு ஓடிவிடும்படி வற்புறுத்துவதாக இருக்கின்றன! இந்தியர்களின் நிலங்களை பர்மா சர்க்கார் ஆர்ஜிதம் செய்துகொள்ளுவதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் பர்மாவிலுள்ள பிரிட்டிஷாரின் சொத்துக்களுக்கு பர்மா சர்க்கார் நியாயமான நஷ்ட ஈடு கொடுப்பது போல் இந்தியர்களுக்கும் கொடுக்க வேண்டுமல்லவா? பல பல ஆண்டுகளாக பர்மாவைச் சுரண்டி வந்த பிரிட்டனுக்கு பர்மா காட்டும் சலுகைகள் கூட இந்தியாவுக்குக் காட்டப்படாதது நன்றி கெட்ட செய்கையேயாகும். இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் பல முக்கியப் பிரச்னைகளையொட்டியும் ஒரு இறுதியான உடன்படிக்கை ஏற்படும் வரையில் மேற்படி அவசரச் சட்டத்தை நிறுத்தி வைக்கும்படி பர்மா சர்க்காரை இந்திய சர்க்கார் பிரதம மந்திரி கேட்டுக்கொள்ள வேண்டுமென்று சென்னை அசெம்பிளியில் ஒரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. எனவே, இந்திய சர்க்காருடைய முயற்சியின் பலனாக பர்மாவில் இந்தியர்களின் உரிமைகளுக்கும் சொத்துக்களுக்கும் பாதுகாப்பு ஏற்படுமென நம்புகிறோம்.


மூலதனத்துக்கும் கைத்தொழில்களுக்கும்
உற்சாகம் அளிப்பதே சர்க்கார் வரவு
செலவு திட்டத்தின் நோக்கமாகும்.
உற்பத்தி பெருக அதுதான் வழி.
- நிதி மந்திரி
உற்பத்தி பெருகட்டும் எனக்கு ஒன்றும் வேண்டாம்
மூலதனம்
கைத்தொழில்
நிதி மந்திரி ஆர்.கே. சண்முகம் செட்டியார்


ஜெயப் பிரகாசரின்
தினசரி அறிக்கை
காங்கிரசிலிருந்து
விலகப் போகிறேன்.
சீக்கிரத்தில்
உடனே
அதிசீக்கிரத்தில்
நாளைக்கே
விலக வேண்டி-
யிருக்கும்

# செழிப்புத் திட்டம்

சுவரை வைத்துக் கொண்டல்லவா சித்திரம் எழுத வேண்டும்?

சுவரே எழும்பாமலிருக்கையில், இன்னும் ஏன் சித்திரம் எழுதவில்லை என்று கண்டிப்பவர்களின் கூற்றை என்னவென்று வர்ணிப்பது?

இருநூறு ஆண்டு அன்னிய ஆட்சியின் விளைவாக இந்தியாவின் கைத்தொழில்கள் அழிந்து விட்டன. அப்படியிருக்க, கைத்தொழில்களையெல்லாம் பொது உடைமையாக்க வேண்டுமென்று சிலர் ஆர்ப்பாட்டம் செய்து வருகிறார்கள்.

கைத்தொழில்கள் சிறந்த முறையில் ஸ்தாபிக்கப்பட்ட பின்னர்தான், அவற்றைப் பொது உடைமையாக்கும் பிரச்னை எழுவது சாத்தியமாகும்.

கைத்தொழில்கள் உருவான முறையில் ஸ்தாபிக்கப்படவில்லை. உற்பத்தியோ வருஷத்துக்கு வருஷம் கீழே போய்க் கொண்டிருக்கிறது.

இதன் மத்தியில் சுதந்திர சர்க்கார் சமாளிக்க வேண்டிய மகத்தான பிரச்னைகள் புதிது புதிதாக முளைத்துக் கொண்டிருக்கின்றன.

தேசத்தைப் பிளந்ததால் ஏற்பட்டுள்ள சீர்குலைவைச் செப்பனிடுவதற்குப் போதிய மனித சக்தியின்றி சர்க்கார் சஞ்சலப்பட்டு வருகிறார்கள்.

பெரிய பாகிஸ்தான் விளைவித்து வரும் தொல்லைகள் ஒருபுறமிருக்க, குட்டி பாகிஸ்தானான ஹைதராபாத்தும் இந்திய சர்க்காருக்கும் மாகாண சர்க்கார்களுக்கும் இடைவிடாத தொல்லைகளைக் கொடுத்து வருகிறது. அகதிகள் விஷயம் இன்னும் முற்றிலும் தீர்ந்தபாடில்லை. வகுப்புவாத ஸ்தாபனங்கள் அறவே ஒழிந்து விட்டனவென்றும் கூறுவதற்கில்லை.

புதிய அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் இந்தியா எத்தனையோ காரியங்களைச் செய்தாக வேண்டும். குறிப்பாக நூற்றுக்குப் பத்து சதவிகிதம் கூட எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இராத இந்த நாட்டில், வயது வந்தவர்களுக்கு வோட்டுரிமை அளிக்கும் முறையை வெற்றிகரமாக நிறைவேற்றுவதென்பது சுலபமான காரியம் அல்ல.

எல்லாவற்றையும் காட்டிலும் பெரிதாக உணவு உடைப் பஞ்சம் இருந்து வருகிறது. ஒரு புறத்தில் பணப் புழக்கம் அதிகமாக இருக்கிறது; மற்றொரு புறத்திலோ வாங்குவதற்குச் சாமான்களின்றிப் பஞ்சம் தாண்டவமாடுகிறது. எனவே உணவு உற்பத்தியும் உடை உற்பத்தியும் பெருகி தற்போதைய அசாதாரண நிலைமை சீர்பட்ட பின்னர்தான் கைத்தொழில்களைத் தேசிய மயமாக்குவது பற்றி, அதாவது கைத்தொழில்களின் நிர்வாகத்தை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளுவது பற்றிச் சிந்திக்க வேண்டும்.

• • •

மேலே குறிப்பிட்ட விஷயங்களை நன்கு கவனிப்பவர்கள்தான் இந்திய சர்க்கார் நிதி மந்திரி ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் இந்தியா பார்லிமெண்டில் சமர்ப்பித்துள்ள 1948-49-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தை யொட்டி நிதானமான முடிவுக்கு வருவது சாத்தியமாகும்.

சுதந்திர இந்தியாவின் முதலாவது வருஷ வரவுசெலவுத் திட்டம் இதுதான்.

இந்தியாவின் உணவு உற்பத்தியும் மற்ற முக்கியமான சாதனங்களின் உற்பத்தியும் அதிகரிக்க வேண்டும்; கைத்தொழில்கள் பெருக வேண்டும். இவற்றை முக்கிய நோக்கமாகக் கொண்டே புதிய வருஷ வரவு செலவுத் திட்டமானது தயாரிக்கப் பட்டிருக்கிறது.

இந்தியாவின் வருங்காலச் செல்வ நிலை பெரிதும் மேற்படி நோக்கம் நிறைவேறுவதையே பொறுத்திருக்கிறது எனலாம்.

ஏனெனில், மூன்று வருஷங்களுக்கு முன் இந்தியா 14 கோடி ரூபாய் பெறுமானமுள்ள உணவுப் பொருள்களை இறக்குமதி செய்தது. ஆனால் இந்த வருஷத்திலோ 110 கோடி ரூபாய் பெறுமானமுள்ள உணவுப் பொருள்களை வெளியிலிருந்து இறக்குமதி செய்யவேண்டியிருக்கிறது.

இறக்குமதி எல்லையின்றி அதிகமாவதைக் காட்டிலும் ஒரு தேசத்தின்

செல்வ நிலையைச் சீர்குலைக்கும் அம்சம் வேறெதுவுமில்லை.

உணவுப் பொருள்களை இறக்குமதி செய்வதற்காக இந்தியா ஏராளமான தொகையைச் செலவழித்துக் கொண்டிருந்தால், பின்னர் மற்ற பல முக்கிய சாதனங்களையும் இறக்குமதி செய்வதற்கு வழியில்லாமற் போகும்.

* * *

இந்தியா உடனடியாகச் செய்ய வேண்டிய கடமை என்னவெனில், உள்நாட்டில் உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதன் மூலம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாவதைக் குறைக்க வேண்டும். மற்றும் பல துறைகளிலும் உற்பத்தியைப் பெருக்கி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதையும் அதிகப்படுத்த வேண்டும்.

இந்தியாவின் செல்வ நிலைமை அபிவிருத்தியடைவதற்கு அதுதான் ஏற்ற வழி.

உற்பத்தி பெருக வேண்டுமாயின் கைத்தொழில்கள் அபிவிருத்தியடைய வேண்டும். கைத்தொழில்கள் அபிவிருத்தியடைவதற்கு மூலதனம் அத்தியாவசியம்.

எனவே, முதலாளிகள் கைத்தொழில்களில் தங்கு தடையின்றி மூலதனத்தைப் போட்டு, தேசத்தில் சாதன உற்பத்தியைப் பெருக்குவதற்காக அவர்களுக்குச் சில சலுகைகள் காட்டப்பட்டிருக்கின்றன.

லாப வரி 16. 2-3 சதவிகிதத்திலிருந்து 10 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. சிறிய கம்பெனிகளுக்கு விதிக்கப்படும் வருமான வரி விகிதமும் குறைக்கப்பட்டிருக்கிறது.

இவை போன்ற மற்றும் பல சலுகைகள் காட்டியிருப்பதன் பலனாக கைத்தொழில்களின் அபிவிருத்தியில் முதலாளிகள் அதிக உற்சாகம் கொள்ள இடமேற்படும்.

* * *

புதிய வரவுசெலவுத் திட்டத்தின்படி 1948-49ல் இந்தியாவின் வருமானம் 230·52 கோடி ரூபாய். செலவு 257·37 கோடி ரூபாய். எனவே 26·85 கோடி ரூபாய் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது.

பாரதநாடு சுதந்திரம் பெற்றபின் எதிர்பாராத பல செலவினங்களைச் சமாளிக்கும்படி நேர்ந்தது. அகதிகளுக்காக ஏற்பட்ட செலவு, காஷ்மீர யுத்தச் செலவு முதலியன எதிர்பாராதவை.

அப்படியிருந்தும் சுமார் 27 கோடி ரூபாய்தான் துண்டு விழுந்திருப்பது இந்தியாவின் திருப்திகரமான செல்வ நிலைமையையே காட்டுகிறது.

அந்த அதிகப்படியான செலவைச் சரிக்கட்ட ஏழை ஜனங்களைப் பாதிக்காத முறையில் புதிய வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

உதாரணமாக மோட்டார் இறக்குமதி தீர்வை, டயர் தீர்வை, சிகரெட், புகையிலை தீர்வை முதலியன உயர்த்தப்பட்டிருக்கின்றன.

பாகிஸ்தான் சர்க்கார் ஏழைகளைப் பாதிக்கக் கூடிய விதத்தில் தபால் கட்டணங்களை உயர்த்தியிருக்கிறார்கள். ஆனால் இந்திய சர்க்கார் அவ்விதம் செய்யாதது போற்றத் தக்கதாகும்.

மற்றும் பாக்குமீதுள்ள வரி ரத்து செய்யப்பட்டிருப்பது இந்தியா முழுவதுமுள்ள கோடிக்கணக்கான தாம்பூலப் பிரியர்களுக்குத் திருப்தியைக் கொடுக்கும்.

இந்திய சர்க்காரின் மொத்த வருமானத்தில் சுமார் பாதி, அதாவது 121 கோடி ரூபாய் ராணுவச் செலவுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. அபிவிருத்தித் திட்டங்களுக்காக சர்க்கார் 165 கோடி ரூபாயும், உணவு மான்யத்துக்காக 20 கோடி ரூபாயும் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

ஏழைகளை மாத்திரமல்ல, பணக்காரர்களையும் கூட அதிகமாகப் பாதிக்காத முறையில் மேற்படி செலவுகளை இந்திய சர்க்கார் சரிக்கட்ட முற்பட்டிருப்பது பிரஸ்தாபத் திட்டத்தின் விசேஷ அம்சமாகும்.

கூடிய சீக்கிரம் சர்க்கார் எஸ்டேட் தீர்வை மசோதாவைக் கொண்டு வர உத்தேசித்திருப்பதாக நிதி மந்திரி அறிவித்திருக்கிறார். அந்த மசோதாவின் பலனாக இந்திய சர்க்காரின் நிதி நிலைமை இன்னும் அதிக அபிவிருத்தியடையுமென நம்பலாம்.

ரிசர்வ் பாங்கியில் இந்தியாவுக்கு 1,512 கோடி ரூபாய் மதிப்புள்ள ஸ்டர்லிங் ஆஸ்தி இருப்பதாகவும் நிதி மந்திரி கூறுகிறார்.

இந்த நிலைமையில், வரிகளை நேர்மையாகச் செலுத்தாமல் தடுத்துச் செய்வோர் தங்களுடைய விபரீதமான போக்கை மாற்றிக் கொண்டு சர்க்காருடன் ஒத்துழைப்பார்களாயின், வருங்காலத்தில் இந்தியாவின் பொக்கிஷ நிலைமை பற்றிக் கவலைக்கு இடமிராது.

# ஓமந்தூராருக்கு ஜே!

சென்ற வருஷம் ஏப்ரல் மாதத்தில் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் சென்னை மாகாணப் பிரதமரானபோது எல்லாரும் எத்தனையோ சந்தேகங்களுக்கு உள்ளானார்கள். "இவருக்கு இங்கிலீஷ் தெரியாதே? நிர்வாக அநுபவம் இல்லையே? இவர் எங்கே இராஜ்ய பாரம் செய்யப் போகிறார்? எத்தனை நாள் உத்தியோகம் பார்க்கப் போகிறார்?" என்று தலையை ஒரே அசைப்பாய் அசைத்தார்கள். அவர்களுடைய சந்தேகத்துக்கெல்லாம் 'டிமிக்கி' கொடுத்துவிட்டு ஓமந்தூர் ரெட்டியார் இராஜ்ய பாரம் செய்து வருகிறார். நன்றாகவும் திறமையாகவும் நிர்வாகம் நடத்தி வருகிறார். ஓமந்தூரின் நிர்வாகத்துக்கு மலை போல வரும் அபாயங்கள் எல்லாம் பனிபோலப் பறந்து விடுகின்றன.

சென்னைச் சட்ட சபையில் ஸ்ரீ கோபால் ரெட்டியார் சென்ற வாரம் சமர்ப்பித்த சென்னை மாகாண பட்ஜெட்டைப் பார்க்கும் போது யாரும் மூக்கில் விரல் வைத்து அதிசயப்படாமல் இருக்க முடியாது.

பழைய மந்திரி சபையைப் போல் மீனமேஷம் பாராமல், தயங்காமல், தடுமாறாமல் சென்னை மாகாணம் முழுமைக்கும் மதுவிலக்கைக் கொண்டு வரப் போவதாகச் சென்ற வருஷம் கனம் ஓமந்தூர் ரெட்டியார் தெரியப்படுத்தினார். அந்தப்படியே வரப்போகிற அக்டோபரிலிருந்து சென்னை நகரம் உள்பட மாகாணம் முழுவதும் மதுவிலக்குச் செய்ய இந்த வருஷ பட்ஜெட்டில் திட்டம் போட்டிருக்கிறது. ஆக மொத்தம் மதுவிலக்குச் சட்டத்தினால் சென்னை மாகாணத்தின் வருமானத்தில் 18 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது!

அப்படியிருந்தும், சென்னை மாகாணத்தின் வரவு செலவுத் திட்டம் மிகவும் திருப்திகரமான நிலைமையில் இருந்து வருகிறது.

1948-49ல் சென்னை மாகாணத்தின்

| | | | |
|---|---|---|---|
| உத்தேச வருமானம் | ரூ. | 50 கோடி | 32 லட்சம் |
| கையிருப்பிலிருந்து | ரூ. | 5 கோடி | 62 லட்சம் |
| ஆக மொத்தம் வரவு | ரூ. | 55 கோடி | 94 லட்சம் |
| உத்தேசச் செலவு | ரூ. | 55 கோடி | 93 லட்சம் |

ஒரு பெரிய இனத்தில் பதினெட்டு கோடி ரூபாய் வருமானம் நஷ்டமாகிவிட்ட பிறகும் மாகாண சர்க்காரின் செல்வ நிலையில் ஒரு குறைபாடும் ஏற்படவில்லை!

மதுவிலக்கினால் ஏற்படும் வருமான நஷ்டத்தோடு மதுவிலக்கை நிறைவேற்றவும் அதிகப்படி செலவு ஆகிறது.

1942-43ல் இம் மாகாணத்தில் கல்விக்காகச் செலவு செய்த தொகை மூன்று கோடி ரூபாய்.

1948-49ல் கல்விக்காகச் செலவு செய்யும் தொகை எட்டுக் கோடி ரூபாய்.

இப்படியாகப் பல பொது நலத் திட்டங்களுக்குக் கோடிக் கணக்காக அதிகப் பணம் செலவு செய்தும் மாகாண பொக்கிஷம் நல்ல நிலைமையில்தான் இருக்கிறது. எடுக்க எடுக்கக் குறையாத அட்சய பாத்திரம்போல் இருக்கிறது. இந்தியாவில் மற்ற எந்த மாகாணத்தையும் விடச் சென்னை மாகாணத்தின் பொருள் நிலைமை செழிப்பென்று சொல்லக் கூடும்.

வரப்போகும் வருஷத்தில் ஏற்கெனவே கையிருப்பிலுள்ள நிதியிலிருந்து ஐந்து கோடி சொச்சம் ரூபாய் எடுத்துக்கொண்டுதான் வரவு செலவைச் சரிக்கட்டுகிறார்கள். ஆனால் ஐம்பது கோடி வரவு செலவுக்கு ஐந்து கோடி 62 லட்சம் கையிருப்பிலிருந்து எடுப்பதில் தவறு ஒன்றுமில்லை. அட்லைவரி கவர்ன்மெண்டு நடந்தபோது பின்னால் மதுவிலக்கு நடத்துவதற்கென்று சேர்த்து வைத்த கையிருப்புத்தான் இது. ஐந்து கோடி 62 லட்சம் ரூபாய் கட்டாயம் எடுத்துக் கொள்ளப்படும் என்பதும் நிச்சயமில்லை. சென்ற வருஷத்திலும் கையிருப்பிலிருந்து எடுத்துக்கொள்வதாகத் திட்டம் போட்டிருந்தார்கள். ஆனால் எடுப்பதற்குப் பதிலாகக் கையிருப்பு நிதியில் மேலும் பணம் சேர்த்தார்கள். அந்தப்படியே ஒரு வேளை வருகிற வருஷத்திலும் நடைபெறலாம்.

மதுவிலக்கு மட்டுமல்லாமல் குதிரைப் பந்தயத்தையும் ஒழிக்கப் போகிறார்கள். அதிலும் வருமான நஷ்டம் வரப் போகிறது.

இப்படிச் சமூக வாழ்க்கையைத் தூய்மைப் படுத்துவதற்காகப் பல செலவினங்

# காந்தி அஞ்சலி—11

*மகாகவி ரவீந்திரநாத் டாகூர் மகாத்மாஜியிடம் அளவற்ற மரியாதையும் பெருமதிப்பும் வைத்திருந்தார். காந்திஜி உண்ணாவிரதம் இருந்ததுபோன்ற பல சந்தர்ப்பங்களில் மகாகவி அவருக்கு அஞ்சலி கூறியிருக்கிறார். பின் வரும் பொன்மொழிகளைப் படித்தால் காந்திஜியின் பெருமையை உள்ளது உள்ளபடி கணித்தவர் மகாகவி டாகூர்தான் என்று தோன்றும்.*

எல்லா மனிதர்களுடைய இதயங்களிலும் குடிகொண்டிருக்கும் ஆண்டவனை, உபநிஷதங்கள் 'மகாத்மா' என்று அழைக்கின்றன வென்பது நமக்குத் தெரியும். 'மகாத்மா' என்ற அந்த அடைமொழி, இன்று நாம் மதித்துப் போற்றும் தெய்வத் தன்மை வாய்ந்த மகாபுருஷனுக்குக் கொடுக்கப்பட்டிருப்பது முற்றிலும் பொருத்தமே யாகும். ஏனெனில், காந்தி என்ற அந்த மகாத்மா எண்ணிறந்த மக்களுடைய உள்ளங்களில் குடிகொண்டிருக்கிறார்.

* * *

மகாபாரதத்திலுங்கூட, 'தர்ம யுத்தம்' என்பது கொடுமையும் ஹிம்ஸையும் நிறைந்ததாகத்தான் இருந்தது. ஆனால் இப்போது "நம்முடைய உயிரை நாம் கொடுப்போம், யாரையும் நாம் கொல்லமாட்டோம். ஆயினும் நமக்குத்தான் முடிவில் வெற்றி கிடைக்கும்" என்னும் போர் முறையைக் காந்திஜி முதல் முதலாக உலகத்துக்கு உபதேசித்திருக்கிறார்.



பலாத்கார யுத்தத்திலே 'மரணம்' என்பதற்கு ஒரேயடியாக அழிந்துபோவது என்றுதான் அர்த்தம். அஹிம்சா முறையிலே நடக்கும் தர்ம யுத்தத்திலோ, யாரும் ஒரேயடியாக அழிந்து போவதில்லை; இறந்த பிறகும் எஞ்சி நிற்பது உண்டு. தோல்விக்குப் பிறகு அவர்களுக்கு வெற்றி கிடைக்கும்; மரணத்துக்குப் பின்னால் அமரத்வம் கிட்டும்.

களைக் கைவிட்டும், மக்களின் முன்னேற்றத்துக்கான பல புதிய செலவுகளை மேற்கொண்டும் சென்னை சர்க்காரின் பொக்கிஷம் நல்ல நிலைமையில் இருக்கிறது.

"மதுவிலக்குச் செய்தால் ஓட்டையாண்டி யாகி விடுவார்கள்" "இன்னால் வெண்ட் கொடுத்து விடுவார்கள்" என்றெல்லாம் துக்கிரியாக்குச் சொன்னவர்களின் ஜோஸியம் பலிக்கவில்லை.

ஆனாலும் மதுவிலக்குப் பிடியாதவர்கள் இன்னமும் குறை கூறுவார்கள். "அடாடா! கலால் வருமானம் பதினெட்டுக் கோடியும் இருந்தால் இன்னும் எவ்வளவோ பொது நன்மைக்குரிய காரியங்கள் செய்திருக்கலாமே!" என்பார்கள்.

உண்மையில், மதுவிலக்கைப்போல் அவ்வளவு சிறந்த பொது நன்மைக்கான காரியம் வேறு ஒன்றும் கிடையாது. பூரண மதுவிலக்கினால் குறைந்தது இருபது லட்சம் மக்கள் கொடிய அரக்கனின் வாயிலிருந்து மீட்கப் படுகிறார்கள். நான்கு லட்சம் வீடுகளில் மங்கள தீபம் ஏற்றி வைக்கப்படுகிறது. காட்டைப் பிடித்த ஒரு பெரும் பீடை தொலைகிறது.

மதுவிலக்கினால் சர்க்கார் பதினெட்டுக் கோடி ரூபாய் நஷ்டம் அடைகிறார்கள் என்றால், சமூகத்தில் மிகவும் ஏழைகளான மக்களின் கையில் ஐம்பது கோடி ரூபாய் மிஞ்சுகிறது என்று வைத்துக் கொள்ளலாம். இதைக் காட்டிலும் பொது நன்மைக் குரிய திட்டம் வேறு என்ன இருக்க முடியும்?

* * *

வரவு செலவுத் திட்டம் சட்டசபையில் விவாதிக்கப்படும்போது சர்க்கார் பேரில் அங்கத்தினருக்கு உள்ள குறைகளையெல்லாம் எடுத்துச் சொல்வது வழக்கம். சென்னைச் சட்டசபையிலும் சில அங்கத்தினர் பிரதம மந்திரியின் பேரில் புகார் கூறினார்கள். "சட்ட சபைக்குப் பிரதமர் வருவதில்லை" "எம். எல். ஏ. க்களுக்குச் சட்டென்று பேட்டி கொடுப்பதில்லை!"—இவைதான் புகார்கள். மற்றப்படி "நிர்வாகம் ஊழல்" என்றோ, "பொதுப் பணம் விரயமாகிறது!" என்றோ, "காங்கிரஸ் திட்டத்தை நிறைவேற்றவில்லை" என்றோ யாரும் புகார் சொல்லவில்லை.

* * *

ஓமந்தூர் மந்திரி சபை நிலைத்திருக்குமா இராதா என்பது பற்றிச் சில காலமாக அரசியல் வட்டாரங்களில் பேச்சு அடிபடுகிறது! ஓமந்தூர் மந்திரி சபை நிலைத்திருந்தாலும் நிலைத்திராவிட்டாலும் இம் மாகாணத்தின் நிர்வாக சரித்திரத்தில் அதன் புகழ் நிலைத்து நிற்கும். சென்னை மாகாண முழுவதும் மதுவிலக்குக் கொண்டு வந்ததும் குதிரைப் பந்தயச் சூதாட்டத்தை ஒழித்ததும் லஞ்சத்தை ஒழிக்கப் பெரும் பிரயத்தனம் செய்ததும் — ஆகிய இந்த மூன்று கைங்கரியங்களினாலும் ஓமந்தூர் மந்திரி சபை சரித்திரத்தில் இடம் பெறும்.

# பஞ்சம் பறந்தது! கூத்து முடிந்தது!!

விவசாயி

இந்திய சர்க்காரின் உணவு மந்திரி ஸ்ரீ ஜயராம் தாஸ் தௌலத்ராம் அவர்கள் சென்னைக்கு அவசரமாக ஓடி வந்ததும், இராமருடைய சைனியம் சஞ்சீவி பர்வதக் காற்றுப் பட்டு எழுந்தது போல, சென்னை மாகாண மந்திரிகள் முதலியோர் மூர்ச்சை தெளிந்து எழுந்தார்கள். உடனே ஒரு திருப்புகழ் பாடி வந்தவரை வரவேற்றார்கள் :—

ராகம்: குதூகலப்பிரியா; தாளம்: நல்வரவு

மலடி வயிற்று மகன்போலே — ஒரு
புதையல் எடுத்த தனம்போலே — நல்ல
அரிசிகொடுத்த கரம்போலே — இங்கு
வருவீரே
எந்தை வருக! ஜயராமரே வருக!
முந்தி வருக! பசி தீர்த்திட உணவு
மந்திரியே! தடையின்றி வந்திடுக!
—தயங்காமல்

மேற்படி கோஷ்டி கானம் முடிந்ததும் உணவு இலாகா காரியதரிசி ஸ்ரீ குற்றாலலிங்கம் பிள்ளை தனிப்பட்ட குரலில் மிக உருக்கமாகச் சென்னை மாகாணத்தின் பரிதாப நிலைமையை எடுத்துப் பாடினார் :—

நொண்டிச் சிந்து மெட்டு

ஐயே ஒரு சேதி கேளும்—இந்த
அநியாய ஆண்டுதன்னில் நடந்த
தெல்லாம்
வானமழை பெய்யவில்லை—அதனால்
வாவி குளம் ஏரியெல்லாம் வற்றிப்
போச்சு
விளைவும் குறைந்து போச்சு—கொஞ்சம்
விளைந்ததும் வெளிவரத் தயங்குதையா!
பசியோடு பட்டினியும்—நாட்டில்
பார்த்த இடத்திலெல்லாம் பரவு
தையா!
விலையை உயர்த்திப் பார்த்தோம்—இந்த
விவசாயிகள் பேராசை தீரவில்லை
ரேஷனைத் தளர்த்திப் பார்த்தோம்—உடனே
மோசம் வந்து விட்டதென்று கோஷ
மிட்டார்
அது என்ன காரணமோ—ஒரு சிலர்
ஆத்திரப் படுகிறார் கூத்தடிக்கிறார்
ஆங்கிலேயர் ஆளுகையிலே—அனைவரும்
ஆண்டவனே கதி என்று அடங்கி
யிருந்தார்.

இத்தனை சோகமும் எப்படியோ கேட்டுச் சகித்துக் கொண்டிருந்த ஸ்ரீ ஜயராம் தாஸ் மேலும் சகிக்க முடியாதவராகி, உணர்ச்சி தொண்டையை அடைக்க, "பாட்டை நிறுத்துங்கள்; பஞ்சத்தைக் காட்டுங்கள்!" என்று அலறினார்.

உடனே விவசாய மந்திரி ஸ்ரீ கே. மாதவ மேனன் முன் வந்து ஸ்ரீ ஜயராம் தாஸைத் தம்முடைய காரில் தூக்கிப் போட்டுக் கொண்டார். செங்கற்பட்டை நோக்கிக் கார் பஞ்சமாய்ப் பறந்தது. காரின் பின்னோடு உணவு இலாகா உத்தியோகஸ்தர்களும் கலெக்டர் ஸ்ரீ என். வெங்கடேசனும் காற்றாகப் பறந்தார்கள்.

மதுராந்தகம் ஏரிக் கரையிலே சென்று நின்றார்கள். கண்ணுக் கெட்டிய தூரம் ஏரி வறண்டு கிடப்பதையும் பயிர்கள் கருண்டு கிடப்பதையும் ஸ்ரீ ஜயராம் தாஸுக்குச் சுட்டிக் காட்டினார்கள். அந்தக் காட்சியைப் பார்த்து இந்திய சர்க்காரின் உணவு மந்திரி அருவி போலக் கண்ணீர் வடித்தார். ஆயினும் அந்தப் பொல்லாத ஏரி நிரம்பவில்லை; பயிரும் தளிர்க்கவில்லை.

"ஏரியில் ஏன் தண்ணீர் இல்லை?" என்று ஜயராம் தாஸ் கேட்டார்.

"மேகம் மழை பெய்யவில்லை!" என்று பதில் வந்தது.

"மழை பெய்யா விட்டால் என்ன? கிணறு வெட்டிக் கொடுக்கக் கூடாதா?" என்று ஸ்ரீ ஜயராம் தாஸ் கேட்டார். உடனே செங்கற்பட்டு கலெக்டர் ஸ்ரீ என். வெங்கடேசன் பாடினார் :—

ராகம்: பிரதாபம்; தாளம்: பிரலாபம்

முன்னு முனையிலே மூன்று கிணறு வெட்டினோம்
மூன்றில் ரெண்டு பாழாச்சு!
ஒன்றில்மட்டும் நீர் இல்லை!
என்னு முனையிலே ஏழு கிணறு வெட்டினோம்
ஏழிலும் ஜலம் உண்டு
இறைக்கமட்டும் வழி இல்லை!

ஸ்ரீ ஜயராம் தாஸ் பஞ்சத்தைக் காட்டிலும் பஞ்சப் பாட்டுக்கு அதிகம் பயப்படத்

சரணம்

அஞ்சு வருஷத்திலே அதிக உற்பத்திக்கு
  அருமையாய்த் திட்டமொன்று
    போடவேணும்
பஞ்சமே வாராமல்
  பட்டினியும் இல்லாமல்
    பாதுகாத்திட வழி காணவேண்டும்
தஞ்சம் தஞ்சமென்று தந்திகள் அடிப்பதும்
  தூதுகள் அனுப்புவதும்
    நீங்க வேண்டும்
வஞ்சனை இல்லாமல் எங்களால் இயன்றதை
  வாரி உலகுக்கு
    அனுப்பிக்கொண்டே வருவோம் (திட்டம்)

இந்திய சர்க்காரின் உணவு மந்திரி இப்படிப் பாடிய பாட்டைக் கேட்டு சபையினரும் திகைத்து மௌன சாகரத்தில் மூழ்கி விட்டார்கள். ஒரே ஒரு மாகாணக் கமிட்டி அங்கத்தினர் மட்டும் தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்து, "திட்ட வேண்டுமா? இதோ நான் தயார்! யாரைத் திட்ட வேண்டும்?" என்று கேட்டார்.

"ஒருவரையும் திட்ட வேண்டாம்! திட்டம் வேண்டும்!" என்று பக்கத்திலிருந்தவர்கள் சொல்லி அவரை மறுபடியும் உட்காரச் செய்தார்கள்.

கடைசியாக, பிரதம மந்திரி கனம் ஓமந்தூர் செட்டியார் மங்களம் பாடினார்:—

ராகம்: கல்யாணக்கலம்; தாளம்: சத்தியம்

பல்லவி

வர்த்தகர்கள் உத்தமர்கள்
  ஆக வேணுமே!
வாங்கிய விலைக்குப் பொருள்
  விற்க வேணுமே!

அநுபல்லவி

உத்தியோகஸ்தர் உண்மையாக
  உழைக்க வேணுமே!
உறுதியாக லஞ்சத்தையும்
  ஒழிக்க வேணுமே!

சரணம்

விவசாயிகள் உழுது பயிர்
  செய்தால் போதுமோ?
விளைந்த நெல்லை ஒளித்திடாமல்
  கொடுக்க வேணுமே!
அவசரமாய் அனைவருமே
  [illegible]
அந்தக் கணம் பஞ்சம் பசி
  பறந்துவிடாதோ!— கைலாசம்
(வர்த்தகர்கள்)

இந்த அற்புதமான பாட்டைக் கேட்டதும் ஸ்ரீ ஜயராமதாஸ் தௌலத்ராம் தமது பரிவாரங்களுடனே ஆகாச விமான நிலையத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்.

பஞ்சம் பறந்தது! பாட்டு முடிந்தது!!

# அஸ்தி யாத்திரை

புது டில்லியிலிருந்து அலகாபாத்—பிரயாகைக்கு மகாத்மா காந்தியின் அஸ்தியை எடுத்துச் சென்ற ஸ்பெஷல் ரயிலில் சென்னையின் பழம்பெரும் தேசத் தொண்டரான ஸ்ரீ பாத சங்கரும் சென்றார். அவர் எழுதியுள்ள கடிதத்தில் சில பகுதிகள் :

11-ம் தேதி காலை சரியாக 6-30 மணிக்குப் புதுடில்லியை விட்டு வண்டி கிளம்பியது. வழியில் முக்கிய ஸ்டேஷன்களில் எல்லாம் நின்றது.

ரயில் நின்ற இடம் என்ன, நிற்காத இடம் என்ன, புறப்பட்ட இடம் என்ன, போய்ச் சேர்ந்த இடம் என்ன—ஒன்றும் சொல்வதற்கே இல்லை.

பொறுக்க முடியாத குளிராயிருந்தும் இரவு ஒரு மணியிலிருந்து புதுடில்லி ரயில்வே ஸ்டேஷனுக்கு இரு பக்கமும் சுமார் இரண்டு மைல் தூரம்வரை ஜனங்கள் லட்சக்கணக்கில் நின்று கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் அஸ்தியின் தரிசனம் கிடைக்க எவ்வளவோ முயற்சி செய்துங்கூட, பாதி ஜனங்களுக்கு மேல் பார்க்க முடியாமல் போய்விட்டது.

மகாத்மாஜி பலமுறை இந்தியா முழுவதும் பிரயாணம் செய்திருக்கிறார். அப்போதெல்லாம் எத்தனையோ லட்சக்கணக்கான மக்கள் பொதுக் கூட்டங்களுக்கும் ஸ்டேஷன்களுக்கும் வந்திருக்கிறார்கள். ஆனால், அன்று அஸ்தி யாத்திரையின்போது கூடிய மாபெருங் கூட்டத்தைப் போல இதுவரை எப்போதுமே கூடியதில்லை.

ரயில் பெரோஷாபாத் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பியதும், சுமார் ஒரு மைல் தூரம் வரை ரயிலைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஓடிக்கொண்டே வந்தார்கள். ஆத்மசக்தியின் வேகத்துக்கு முன்னால் ரயில் வேகம் என்ன செய்ய முடியும்?

அஸ்தி யாத்திரைக் காட்சியைப் போட்டோ எடுப்பதற்காக அதே ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த அந்நிய நாட்டுப் பத்திரிகைக்காரர்கள், இதுவரை உலகத்தில் எந்த தேசமும் இப்படி ஒரு தலைவரை வணங்கி மரியாதை செய்ததைத் தாங்கள் பார்த்ததே இல்லை, இனிமேல் பார்க்கப் போவதும் இல்லை என்றார்கள்.

* * *

டில்லியிலிருந்து அலகாபாத் சுமார் 400 மைல். இந்த 400 மைல் தூரமும் ரயிலுக்கு இருபுறமும் இரு பெருஞ் சுவர்கள் வைத்தது போலக் கிராம ஜனங்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களிற் பலர் ரயிலைப் பின்தொடர்ந்து பல மைல் தூரம் ஓடி வந்தது வண்டியில் யாத்திரை செய்தவர்களுடைய மனதை உருக்கி விட்டது. பிரயாணிகளுடைய நிலைமையே அப்படி இருந்தது என்றால், காந்திஜியின் பக்தர்கள், சகாக்கள் இவர்களுடைய விசனத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. பாபுஜியின் பேரன் கோபு 'ஜே' கோஷம் போடும்போதெல்லாம் வண்டியில் எல்லோருக்கும் அளவு கடந்த துக்கம் உண்டாயிற்று.

யாத்திரை வண்டி ஓடிக்கொண்டிருந்த போது, அங்கங்கே மந்தை மந்தையாக மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளும் மாடுகளும் கூட 'இனி நம் கதியைப் பற்றிக் கவலைப் படுபவர்கள் யார்? நம்மை ரட்சிப்பவர்கள் யார்?' என்று கண்ணீர் விட்டுக் கதறுவது போலத் தலையைத் தூக்கிக் கொண்டு பார்த்த வண்ணம் இருந்தன.

* * *

கடைசியாக, யாத்திரை வண்டி 12-ம் தேதி காலை 9-மணிக்கு அலகாபாத்தை அடைந்தது. எங்கே பார்த்தாலும் ஒரே ஜனக் கூட்டத்தைத் தவிர, வேறு எதையுமே பார்க்க முடியவில்லை. எள் போட்டால் கீழே விழாது. ஐந்து மைல் தூரம் வரை ரஸ்தாவுக்கு இரு புறமும் ஜனங்கள் நிறைந்திருந்தார்கள். ஆயிரக்கணக்கான ஜனங்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது. வழி எங்கும் ஒரே புஷ்பமாரி. 'மகாத்மா காந்தி ஜே ஹோ!' என்ற கோஷம். 'ரகுபதி ராகவ ராஜாராம்!' பஜனை.

இருபுறமும் கூடியிருந்த ஜனங்களுடைய தொகை சுமார் 20 லட்சம் இருக்கும்.



அலகாபாத் நகரின் வீதிகளில் மகாத்மாவின் அஸ்தி கலச ஊர்வலம் சென்றபோது இந்திய சைன்யத்தின் பல பகுதிகளும் அணிவகுத்து முன்னால் சென்றன. வெள்ளைக் குதிரைப் படையும், காலாள் வீரர் படையும் ......

மெய்ப்புக் குதிரைப் படையும் அஹிம்சா மூர்த்திக்கு மரியாதை செய்தன.



★

பிரதம மந்திரி ஜவாஹர் லால்ஜியும் இந்திய சட்ட சபைத் தலைவர் மாவலங்கரும் ஊர்வலத்தில் பாதசாரியாக நடந்து சென்றார்கள்.

★



பிரயாகை என்னும் புண்ணிய தீர்த்தத்தைத் தரிசியுங்கள்; கங்கையும் யமுனையும் சங்கமமாகும் இடம் வட்டத்திற்குள் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

★

ஊர்வலம் நதிக்கரையை அடைந்ததும் அஸ்தி கலசத்தை, தரையில் ஊர்ந்து தண்ணீரில் மிதக்கும் (Duck என்னும்) மோட்டார் படகில் ஏற்றினார்கள்.

மோட்டார் படகு நதியிலே இறங்கியது.

•

எதற்கும் கலங்காத சர்தார் படேலின் கண்ணும் கலங்கியது.

நதிக்கரையில் காத்திருந்த நாற்பது லட்சம் ஜனங்கள் தரிசிக்குமாறு அஸ்திப் படகு கரையோரமாகச் சிறிது நேரம் ஊர்ந்து சென்ற பிறகு, நதியின் மத்தியை நோக்கித் துரிதமாகச் சென்றது.



கங்கை யமுனை சங்கமத்தில் காந்திஜியின் அஸ்தி கரைக்கப்பட்ட பிறகு பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு கரைக்கு வந்தார். துயரில் ஆழ்ந்திருந்த லட்சக் கணக்கான மக்களுக்கு "பாபு இறக்கவில்லை; நம்முடைய நெஞ்சில் இருக்கிறார்!" என்று ஆறுதல் கூறினார்.




## 11. கோர்ட்டில் முதல் வழக்கு

பாரிஸ்டர் மோகன் தாஸ் காந்தி பம்பாய்த் துறைமுகத்தில் இறங்கியதும் மிகத் துயரம் தரும் செய்தி அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தது. மோகன்தாஸ் இங்கிலாந்திலிருந்த போதே அவருடைய அருமைத் தாயார் காலமாகி விட்டார். தூரதேசத்தில் இருக்கும்போது இதைத் தெரிவித்து அவரைத் துன்பத்துக்கு ஆளாக்க வேண்டாமென்று அவருடைய சகோதரர் மேற்படி செய்தியைக் கடிதத்தில் எழுதவில்லை. கப்பலை விட்டு இறங்கிய வுடனே தெரியப்படுத்தினார்.

மோகன் தாஸின் மனதில் இருந்த எத்தனையோ எண்ணங்கள் அந்தச் செய்தியினால் பங்கமுற்றுப் போயின. அன்னை தன்னை வரவேற்றுத் தழுவிக் கொண்டு மகிழ்வார் என்று எதிர் பார்த்தார். "இங்கிலாந்தில் மூன்று வருஷம் வசித்தேன். ஆயினும் விரத பங்கம் செய்யவில்லை. தங்களுக்கு அளித்த மூன்று வாக்குறுதிகளையும் நிறைவேற்றினேன்" என்று பெருமையுடன் சொல்லிக்கொள்ள விரும்பினார். இந்த விருப்பங்கள் நிறைவேறுவதற்கில்லை. ஆயினும் மோகன் தாஸ் அன்னையை நினைத்து அழுது புலம்பிக் கொண்டிருக்கவில்லை. செய்ய வேண்டிய வைதிகக் கிரியைகளைச் செய்து விட்டு வாழ்க்கைக்குரிய தொழிலைத் தொடங்குவதில் கவனம் செலுத்தினார்.

மோகன் தாஸின் தமையனார் அவரைப் பற்றி ஆகாசக் கோட்டைகள் பல கட்டியிருந்தார். பாரிஸ்டர் பரீட்சையில் தேறி வந்திருக்கும் தம் சகோதரர் பெயரும் புகழும் பெற்றுப் பாரிஸ்டர் தொழிலில் பணம் நிறையச் சம்பாதிக்கப்போகிறார் என்று நம்பியிருந்தார். தம்பி இளையவர் பாரிஸ்டர் தொழில் தொடங்குவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் மூத்தவர் செய்திருந்தார்.

எனவே, பம்பாயில் 'பாரிஸ்டர்' என்ற போர்டு தொங்கவிட்டுக் கொண்டு மோகன் தாஸ் தொழில் செய்ய ஆரம்பித்தார். ஆனால், தம்பி! பாரிஸ்டர் மோகன் தாஸுக்குக் கிடைத்த முதல் வழக்கை அவர் நடத்திய இலட்சணத்தைப் பற்றிக் கேட்டாயானால் உனக்கு ஒரே ஆச்சரியமாயிருக்கும்; உன்னால் நம்பவே முடியாது. காந்தி மகாத்மாவே தமது சுய சரிதத்தில் எழுதியிரா விட்டால் யாராலுமே நம்ப முடியாதுதான்.

வாதம் செய்வதில் உலகத்திலேயே யாரும் இணையில்லை என்று பிற்காலத்தில் புகழ் பெற்றவர் காந்திஜி. லட்சக் கணக்கான மக்களின் முன்னால் ஆயிரமாயிரம் பொதுக்கூட்டங்களில் பேசியவர் காந்திஜி. கவர்னர் ஜெனரல்கள், பிரதம மந்திரிகள் உள்பட உலகத்தின் பிரசித்த இராஜதந்திரிகள் எல்லாரும் திகைத்துத் திணறும்படியாகத் தமது கட்சியை எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றிருந்தவர். அத்தகையவர் பம்பாய் 'ஸ்மால் காஸ்' கோர்ட் ஒன்றில் ஒரு சிறு வழக்கில் மமிபாய் என்னும் பெண்மணியின் சார்பாக ஆஜரானார். வழக்கில் மமிபாய் பிரதிவாதி. எனவே, வாதி தரப்புச் சாட்சிகளை பாரிஸ்டர் மோகன் தாஸ் குறுக்கு விசாரணை செய்ய வேண்டியிருந்தது. முதல் சாட்சியைக் குறுக்கு விசாரணை செய்வதற்காக எழுந்து நின்றார். ஆனால் ஒன்றும் கேட்கத் தோன்றவில்லை. தலை சுழல ஆரம்பித்தது. நீதி மன்றமும் நீதிபதியும் சாட்சிகளும் எல்லாருமே சுழலு



போர்பந்தரில் காந்தி மகான் பிறந்த இல்லம்—வெளிப்புறம்

வதாய்த் தோன்றியது. ஒரு கேள்வியும் கேட்காமலேயே ஆசனத்தில் உட்கார்ந்தார். சட்டிக்காரி மமி பாயின் பிரதிநிதி பக்கத்தில் இருந்தார். அவரிடம் தம்மால் வழக்கு நடத்த முடியாதென்றும் வேறொரு வக்கீலை அமர்த்திக் கொள்ளும்படியும் சொல்லி விட்டு வெளியேறினார்.

இம்மாதிரி தயக்கத்துக்கும் திகைப்புக்கும் 'சபைக் கோழைத்தனம்' என்று சொல்வார்கள். வாழ்க்கையின் ஆரம்பத்தில் காந்தி மகாத்மா சபைக் கோழையாயிருந்தார் என்பது மிக ஆச்சரியகரமான விஷயம் இல்லையா?

இந்த முதல் அனுபவத்துக்குப் பிறகு பாரிஸ்டர் மோகன்தாஸ் கோர்ட்டுக்குப் போவதை நிறுத்தி விட்டார். வழக்குகள் சம்பந்தமான விண்ணப்பங்கள் எழுதிக் கொடுப்பதில் தமக்கு ஆற்றல் உண்டு என்பதைக் கண்டுபிடித்தார். இந்த வேலை செய்யத் தொடங்கினார். ஆனால் இதில் வருமானம் போதிய அளவு கிடைக்கவில்லை.

உபாத்தியாயர் ஆகலாம் என்ற விருப்பம் உண்டாயிற்று. ஆங்கில பாஷையில் நல்ல தேர்ச்சி இருந்தபடியால் அந்த பாஷையை நன்றாகக் கற்பிக்கலாம் என்ற நம்பிக்கை இருந்தது. "ஓர் ஆங்கில உபாத்தியாயர் தேவை. தினம் ஒரு மணி நேரம் சொல்லிக் கொடுக்க வேண்டும். மாதச் சம்பளம் ரூ 75" என்ற விளம்பரத்தைப் பார்த்து விட்டு விளம்பரம் செய்திருந்த நபரிடம் போனார். மோகன்தாஸ் பி. ஏ. பட்டதாரி அல்ல என்று தெரிந்ததும் அவரை வேண்டாம் என்று சொல்லி விட்டார் விளம்பரம் செய்தவர். எப்படியிருக்கிறது கதை!

"உலகத்திலேயே ஆங்கில பாஷையைப் பிழைகள் இல்லாமலும் லாகவமாகவும் கையாளக்கூடிய ஒரு சிலரில் காந்திஜியும் ஒருவர்" என்று நீ கேள்விப் பட்டிருப்பாய். அப்படிப் பட்டவர் வாழ்க்கை தொடங்கிய போது, அவரை ஆங்கிலம் கற்பிக்க லாயக்கில்லாதவர் என்று சொல்லி விட்டார்கள்!

அதன்பேரில் பம்பாயில் இருப்பதில் இனிப் பயனில்லை என்று கண்டு பாரிஸ்டர் காந்தி இராஜ கோட்டைக்கே போய் விடுவது என்று தீர்மானித்தார். அதற்கு அவருடைய சகோதரரும் இசைந்தார். சகோதரர் ஏற்கெனவே இராஜ கோட்டையில் ஒரு சின்ன வக்கீல்; இன்னொரு வக்கீலுடன் கூட்டாகச் சேர்ந்து தொழில் நடத்திக் கொண்டிருந்தார். மோகன் தாஸும் இராஜ கோட்டைக்கு வந்து விட்டால் விண்ணப்பம் தயாரிப்பது முதலிய வேலைகள் அவருக்குக் கொடுக்கலாம் என்று நினைத்தார். பம்பாய்க் குடித்தனத்தின் செலவும் மிச்சமாகும். எனவே, ஆறு மாதம் பம்பாய் வாழ்க்கை நடத்திய பிறகு பாரிஸ்டர் மோகன் தாஸ் காந்தி இராஜ கோட்டைக்குச் சென்றார்.

பம்பாயைவிட்டு மோகன் தாஸ் புறப்படுவதற்கு முன் அவருடைய பம்பாய் வாழ்க்கையைப் பற்றிச் சில விவரங்களைக் கூறவேண்டும். குதிரை வண்டியிலோ டிராமிலோ அவர் ஏறுவது கிடையாதாம். தினம் பம்பாய் ஹைகோர்ட்டுக்கு நடந்து போவாராம்; நடந்தே திரும்பி வருவாராம். இதனால் பணம் மிச்சமானதோடு, தேக ஆரோக்கியத்துக்கும் அந்த வழக்கம் உகந்ததாயிருந்ததாம். பம்பாயில் அவருடைய நண்பர்கள் பலர் அடிக்கடி நோயினால் படுத்துக் கொள்வது வழக்கமாம்; ஆனால் காந்திஜி ஒரு தடவைகூட நோய் என்று படுத்தது கிடையாதாம். தினந்தோறும் சிறிது தூரமாவது நடக்கும் வழக்கத்தைக் காந்திஜி கடைசி வரையில் கைக்கொண்டிருந்தார். "இந்த நல்ல வழக்கத்தின் நற்பயன்களை இன்றளவும் நான் அநுபவித்து வருகிறேன்" என்று 'சத்திய சோதனை'யில் மகாத்மா எழுதியிருக்கிறார்.

பம்பாயில் இருந்தபோது பாரிஸ்டர் மோகன் தாஸுக்கு ராஜ சந்திரர் என்னும் ஒரு வர்த்தகருடன் நட்பு உண்டா

பிற்று. இவர் இருபத்தைந்து வயதான இளைஞர்தான். ஆனால் கவிஞர் என்றும் சதாவதானி என்றும் புகழ் பெற்றிருந்தார். காந்திஜிக்கு அவருடைய அதிசய ஞாபகசக்தி அளவற்ற வியப்பை யளித்தது. ஆனால் அவருடைய நல்லொழுக்கத்துக்காகவும் சமயங்களைப் பற்றிய ஞானத்துக்காகவுமே காந்திஜி அவர்மீது மரியாதை கொண்டார். முக்தானந்தர் என்பவரின் கீதம் ஒன்றை அவர் அடிக்கடி பாடிக் கொண்டிருப்பாராம். அந்தக் கீதத்தின் கருத்து வருமாறு :—"தினசரி வாழ்க்கையில் நான் புரியும் செயல் ஒவ்வொன்றிலும் ஆண்டவனை எப்போது காண்கிறேனோ அப்போதே கிருதார்த்தனாவேன். முக்தானந்தனின் உயிரைத் தாங்கி நிற்கும் நூலிழை ஆண்டவனே அன்றோ ?"

ராய்சந்தர் பெரிய ரத்தின வியாபாரி. முத்து, வைரப் பரீட்சைகளில் அவர் கைதேர்ந்தவர். எனினும் நகைக் கடையில் பெட்டியடியில் உட்கார்ந்து கொண்டு வியாபாரம் செய்த நேரம் போக ஏதாவது ஒரு சமய நூலைப் படித்துக் கொண்டிருப்பாராம். உலக வாழ்க்கையின் மத்தியில் தாமரை இலைத் தண்ணீரைப் போல் இருந்துகொண்டு ராய்சந்தர் கடவுளைத் தேடிக் கொண்டிருந்தார் என்பது காந்திஜிக்கு ஐயமறத் தெரிந்தது. பிற்காலத்தில் எவ்வளவோ சமய குருமார்களையும் மதத் தலைவர்களையும் காந்திஜி சந்தித்ததுண்டு; அவர்களுடைய போதனைகளைக் கேட்டதுண்டு. ஆனால் ராய்சந்தரைப்போல் அவருடைய மனதை யாரும் கவரவில்லை.

இவ்வாறு ராய்சந்தரின் ஒழுக்கப்பற்றும் அறிவு மேன்மையும் சமய ஞானமும் அவரிடம் காந்திஜிக்குப் பிரமாதமான மதிப்பையும் பக்தியையும் உண்டாக்கிற்று. ஆயினும் அவரைக் காந்திஜி தம்முடைய குருநாதராக ஏற்றுக் கொள்ளவில்லை.

இந்த விஷயம் சம்பந்தமாகக் காந்தி மகான் சொல்லி யிருப்பதைக் கேள் :—

"என்னுடைய குரு நாதரை இன்னும் நான் தேடிக்கொண்டு தான் இருக்கிறேன். ஆனால் இன்றுவரைக்கும் என் இருதய சிம்மாசனம் காலியாகவே இருந்து வருகிறது. ஆத்ம சாதனத்துக்கு வழிகாட்டக் குரு ஒருவர் அவசியம் என்பது ஹிந்து சமயக் கொள்கை. இதில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால் அத்தகைய குருவானவர் பரிபூரண மடைந்தவரா யிருக்க வேண்டும். அரை குறைப் படிப்பும் அறிவும் உள்ளவர்களிடம் லௌகிகக் கல்வியை கற்றுக்கொள்ளலாம். ஆனால் ஆத்ம ஞானம் பெறுவதற்கு இது கூடாது. பரிபூரண ஞானியையே பரம குருவாகக் கொள்ளவேண்டும். அத்தகைக் குருவைப் பெறுவதற்காக நாம் நம்முடைய குறைகளை யெல்லாம் போக்கிக் கொள்ளவும் பூரணத்துவம் பெறவும் இடைவிடாமல் முயன்று வர வேண்டும். நாம் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்துகொண்டிருந்தால், குருநாதர் கிடைப்பது இறைவனுடைய திருவுளப்படி நடக்கும்."

இவ்விதம் மகாத்மா காந்தி தமது சுயசரிதத்தில் எழுதி யிருக்கிறார். அதன்படியே அவர் வாழ்க்கை யெல்லாம் பூரணத்துவம் பெற இடைவிடாது பிரயத்தனம் செய்து வந்தார். ஆயினும் காந்திஜிக்குப் பரம குரு கிட்டவில்லை. இறைவனுடைய திருவுள்ளம் வேறு விதமா யிருந்தது. அவரே ஆயிரக்கணக்கானவர்களுக்கும் லட்சக்கணக்கானவர்களுக்கும் பரம குருவாக ஏற்பட வேண்டுமென்று இறைவன் திருவுள்ளம் இருக்கையில், அவருக்குத் தகுந்த குருநாதர் எப்படிக் கிடைப்பார்!



மகாத்மா பிறந்த வீட்டின் உட்புறம்

# 12. வாழ்வில் முதல் அதிர்ச்சி

பம்பாயை விட்டுக் காந்திஜி இராஜகோட்டை சென்றார். சகோதரர் கூறியபடியே விண்ணப்பம் எழுதிக்கொடுக்கும் வேலை அவருக்கு நிறையக் கிடைத்து வந்தது. மாதம் முந்நூறு ரூபாய் வரையில் வருமானம் கிடைத்தது.

இந்த நாளில் காந்திஜிக்கு ஏற்பட்ட ஓர் அநுபவம் அவருடைய வாழ்க்கையில் முதலாவது பெரும் அதிர்ச்சியை அளித்தது. அந்த அநுபவம் இதுதான்.

போர்பந்தர் ராஜாவுக்கு முடிசூட்டு நடப்பதற்கு முன்னால் அவருக்கு அந்தரங்கக் காரியதரிசியாகக் காந்திஜியின் தமையனார் வேலை பார்த்து வந்தார். ராஜாவுக்கு அச்சமயம் தப்பு யோசனை சொன்னதாக அவர்மீது குற்றம் சாட்டப்பட்டது. இந்த விஷயம் அப்போது பொலிடிகல் ஏஜெண்டு என்னும் பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதியினால் பரிசீலனை செய்யப்பட்டு வந்தது.

மேற்படி உத்தியோகஸ்தர் இங்கிலாந்தில் காந்திஜி இருந்தபோது அவருக்குப் பரிச்சயமானவர். ஓரளவு சிநேக உரிமை பாராட்டியவர் என்றும் சொல்லலாம்.

எனவே அந்த நட்பைப் பயன்படுத்திக் கொண்டு மோகன் தாஸ் பொலிடிகல் ஏஜெண்டைப் பேட்டி காண வேண்டும் என்றும் தம்மைப் பற்றிய தப்பு அபிப்பிராயத்தைப் போக்கவேண்டும் என்றும் காந்திஜியின் தமையனார் விரும்பினார்.

இந்த யோசனை காந்திஜிக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தமையனார் நிரபராதியாயிருக்கும் பட்சத்தில் தம்முடைய கட்சியைச் சொல்லிவிட்டுத் தைரியத்துடன் முடிவை எதிர் பார்ப்பதுதான் சரியான முறை என்று கருதினார். அவ்விதமே சகோதரரிடம் கூறினார். ஆனால் சகோதரருக்கு இந்தத் தர்மோபதேசம் ஒன்றும் பிடிக்கவில்லை. "உனக்குக் கத்தியவாரைப் பற்றி ஒன்றும் தெரியாது. இங்கே எல்லாம் செல்வாக்கின் மூலம்தான் நடைபெறுகிறது. உனக்கு நன்றாய்த் தெரிந்த மனிதரிடம் என்னைப்பற்றி ஒரு வார்த்தை சொல்வது உனக்கு மிகவும் எளிய காரியம். அதை நீ செய்யவில்லையென்றால் சகோதர விசுவாசம் உனக்குக் கொஞ்சமும் இல்லையென்றுதான் ஏற்படும்!" என்று கூறினார்.

தமக்கு எவ்வளவோ உபகாரங்கள் செய்திருக்கும் தமையனாருடைய மனதைப் புண்படுத்த விரும்பாமல் காந்திஜி மேற்படி உத்தியோகஸ்தரைப் பார்க்கச் சென்றார்.

சந்திப்பின் ஆரம்பத்திலேயே இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உள்ள வித்தியாசம் நன்கு தெரிந்தது. பழைய சிநேகத்தை நினைப்பூட்டியதும் துரையின் கடுகடுப்பு அதிகமாயிற்று. "அதைத் துர் உபயோகப்படுத்திக்கொள்ள வந்தீரா?" என்னும் கேள்வி அந்தக் கடுகடுத்த முகத்தின் நெற்றியில் எழுதி ஒட்டியிருந்தது.

ஆயினும் காந்திஜி தமது சகோதரரைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். உடனே துரை பொறுமை இழந்து, "உம்முடைய சகோதரர் பெரிய சூழ்ச்சிக்காரர். அவரைப்பற்றி உம்மிடம் எதுவும் கேட்க நான் விரும்பவில்லை. அதற்கு நேரமும் எனக்குக் கிடையாது. உம்முடைய தமையனார் சொல்லவேண்டியது ஏதேனும் இருந்தால் முறைப்படி எழுதித் தெரிவித்துக் கொள்ளட்டும்" என்றார்.

ஆனாலும் காந்திஜி நிறுத்தாமல் பிடிவாதமாக மேலே பேச ஆரம்பித்தார். "தயவு செய்து நான் சொல்வதைக் கேட்டு விடுங்கள். அப்புறம் எது வேணுமானாலும் செய்யுங்கள்!" என்றார். துரைக்குத் தலைக்குமேல் கோபம் வந்துவிட்டது. "போதும்! நீர் போகலாம்!" என்றார். காந்திஜி போகவில்லை. துரை தமது சேவகனைக் கூப்பிட்டுக் காந்தியை வெளியே அனுப்பும்படி கட்டளையிட்டார். சேவகன் வந்து காந்திஜியின் கழுத்தைப் பிடித்துத் தள்ளியபடி வெளியே கொண்டு வந்து விட்டான்.

இதைப் பற்றிய ஒரு வேடிக்கைச் சம்பவத்தைச் சொல்லுகிறேன் கேள், தம்பி! 1926-ம் ஆண்டில் காந்திஜி தமது சுயசரிதத்தை 'யங் இந்தியா'வில் எழுதி வந்தார். அப்போது இந்தக் கட்டம் வந்தது. வாரா வாரம் மகாத்மா சுயசரிதத்தை மொழிபெயர்த்துப் போட்டுக் கொண்டிருந்த ஒரு தினப் பத்திரிகையின் சுவர் ஒட்டும் போஸ்டர் விளம்பரங்களில் "மகாத்மா காந்தி கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்டார்!" என்று கொட்டை எழுத்துக்களில் அச்சிட்டிருந்தது. அந்த

சமயம் இந்தியாவின் மாபெரும் தேசியத் தலைவராக மகாத்மா ஆகியிருந்தார். எனவே தமிழ் மக்கள் ஒரே பரபரப்படைந்து மேற்படி தினப் பத்திரிகையை வாங்கிப் படித்தார்கள். "ஓகோ! இது பழைய கதையா?" என்று எண்ணி ஆறுதல் அடைந்தார்கள். இது அந்தக் காலத்தில் கடைப்பிடிக்கப்பட்ட ஒரு வகைப் பத்திரிகை தர்மம்.

போகட்டும்; மேலே காந்திஜியின் கதைக்குச் செல்கிறேன்.

சேவகனால் தோளைப் பிடித்து வெளியிலே கொண்டு விடப்பட்ட மோகன் தாஸின் உள்ளம் கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் துடிதுடித்தது. துரையின் பங்களா வாசலில் நின்றுகொண்டு துரைக்கு ஒரு கடிதம் எழுதினார். "என்னை நீர் அவமதித்துவிட்டீர். உமது சேவகனைக் கொண்டு தாக்கச் செய்தீர். தக்க பரிகாரம் உடனே செய்யாவிட்டால் சட்டப்படி நடவடிக்கை எடுப்பேன்!" என்று கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

துரையிடமிருந்து பளிச்சென்று பதில் வந்தது! "நீர் முரட்டுத்தனமாய் நடந்துகொண்டீர். வெளியே போகச் சொல்லியும் போகவில்லை. ஆகையால் சேவகனை விட்டு வெளியிலே கொண்டுவிடச் செய்ய வேண்டி வந்தது. உம் இஷ்டம்போல் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்."

காந்திஜி மேற்படி பதிலுடன் வீடு திரும்பினார். சகோதரரிடம் எல்லாம் கூறினார். துரைமீது எப்படி நடவடிக்கை எடுத்துக் கொள்வது என்று தெரியவில்லை. அந்தச் சமயம் ஸர் பிரோஸ்ஷா மேத்தா இராஜகோட்டைக்கு ஒரு வழக்கு நிமித்தமாக வந்திருந்தார். மோகன் தாஸ் ஒரு பிரபல இராஜகோட்டை வக்கீல் மூலமாக அவரிடம் யோசனை கேட்கச் செய்தார். ஸர் பிரோஸ்ஷா மேத்தா கூறியதாவது :—

"காந்தி இப்போதுதான் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்திருக்கிறார். அதனால் அவருக்கு ரோஷம் அதிகமாயிருக்கிறது. வக்கீல்களும் பாரிஸ்டர்களும் இம்மாதிரி அநுபவங்களுக்கு இந்நாட்டில் தயாராகவேயிருக்கவேண்டும். பொலிடிகல் ஏஜெண்ட் மீது வழக்குத் தொடர்வதால் நன்மை ஏதும் ஏற்படாது. வெட்கத்தை வெளியில் சொல்லாமலிருப்பதே நல்லது."

இந்தப் புத்திமதி காந்திஜிக்கு நஞ்சைப் போல் இருந்தது. ஆயினும் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. "இனிமேல் இந்த மாதிரி சங்கடத்தில் ஒருகாலும் அகப்பட்டுக் கொள்ள மாட்டேன்; சிநேகிதத்தைச் சொந்தக் காரியத்துக்கு உபயோகித்துக் கொள்ள முயல மாட்டேன்!" என்று அவர் சங்கல்பம் செய்து கொண்டார்.

மேற்படி சம்பவம் காந்திஜியின் பிற்கால வாழ்க்கைப் போக்கையே மாற்றி அமைப்பதற்கு ஏதுவாயிருந்தது.

சகோதரருக்காக என்றாலுங்கூட அந்த உத்தியோகஸ்தரிடம் சிபார்சுக்காகத் தாம் போனது தவறு என்பதை மோகன்தாஸ் உணர்ந்திருந்தார். எனினும் அந்த உத்தியோகஸ்தர் அவ்வளவு கடு கடுப்புக் கொண்டதற்கும் வெளியில் பிடித்துத் தள்ளும்படி உத்தரவிட்டதற்கும் எவ்வித நியாயமும் கிடையாது. கறுப்பு மனிதர் வாய்திறந்து பேசியதே அந்த வெள்ளைக்கார அதிகாரிக்குப் பிடிக்கவில்லை. அதிகார வெறியினால் அவர் மதிமயங்கிப் போயிருந்த படியாலேயே அவ்வளவு கேவலமாக நடந்துகொண்டார். இது அவருடைய சர்வ சாதாரண வழக்கம் என்றும், யாரையும் அவர் அவமதிப்பது உண்டு என்றும் மோகன் தாஸ் தெரிந்து கொண்டார். அப்படிப்பட்டவருடைய கோர்ட்டில் ஆஜராவது மோகன்தாஸுக்குப் பிடிக்கவில்லை. இராஜகோட்டையில் இருந்தால் அவருடைய கோர்ட்டுக்குப் போய்த்தீர வேண்டி வரும்.

இதற்கிடையில் கத்தியவார் பிரதேசத்தின் அரசியலைப்பற்றி மோகன்தாஸ் சிறிது விசாரித்துத் தெரிந்து கொண்டிருந்தார். கத்தியவாரில் சிறு சிறு சமஸ்தானங்கள் அநேகம் இருந்தன. அந்த சமஸ்தானங்களின் ராஜாக்கள் பெரும்பாலும் சுய புத்தியற்றவர்கள். பிறரிடம் யோசனை கேட்டே எந்தக் காரியமும் செய்வார்கள். எனவே சூழ்ச்சிகளுக்கு இடம் தாராளமாயிருந்தது. ஒவ்வொரு சமஸ்தானமும் மற்றசமஸ்தானங்களை எதிர்த்துச் சூழ்ச்சி செய்தது. ஒவ்வொரு உத்தியோகஸ்தரும் மற்ற உத்தியோகஸ்தர்களுக்கு 'வெடிவைக்க'ச் சூழ்ச்சி செய்தார்கள். எல்லாருக்கும் மேல் உத்தியோகஸ்தர் மோகன் தாஸை வெளியே தள்ளச் செய்த துரைதான். அவருடைய தயவைப் பெறுவதற்கு முதலில் அவருடைய சேவகனுடைய தயவைத் தேடவேண்டும், துரையின் கண்களும் காதுகளுமாக இருந்த சிரஸ்தார் பெரிய தகப்பன்சாமி. துரையை விடச் சிரஸ்தாருக்கு வரும்படி அதிகம்.

மொத்தத்தில் கத்தியவாரில் அடித்த காற்றே விஷக்காற்று என்று மோகன்

தாஸுக்குத் தோன்றியது. அங்கே யிருந்தால் மேற்படி விஷவாயுவினால் பாதிக்கப் படாமல் தப்புவது கடினம் என்று எண்ணினார். அதோடு, கோர்ட்டுகளில் தம்முடைய கட்சிக்காரர்களுக்கு நியாயம் கிடைப்பதில்லை யென்பதையும் கட்சிக்காரர்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டுமானால் முறையில்லா முறைகளைக் கையாள வேண்டும். மோகன்தாஸினால் அது இயலாத காரியம்.

இப்படிப்பட்ட மோசமான நிலைமையில் அங்கே எப்படி யிருப்பது, எத்தனை நாள் அவ்விடமிருந்து காலந் தள்ள முடியும் என்று மோகன் தாஸின் உள்ளம் கலங்கிக் கொண்டிருந்த போது, ஆண்டவன் வழி காட்டினார். மோகன் தாஸ் எந்த இலட்சியத்துக்காக இவ்வுலகில் ஜனனம் எடுத்தாரோ அந்தக் காரியத்தைத் தொடங்குவதற்குரிய காலமும் வந்து கூடியது.

போர்பந்தரிலிருந்து ஒரு வியாபாரக் கம்பெனியார் மோகன் தாஸின் சகோதரருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதன் விஷயம் வருமாறு: மேற்படி போர்பந்தர் வியாபாரக் கம்பெனிக்குத் தென்னாப்பிரிக்காவில் பெரிய கிளை ஆபீஸ் இருந்தது. இந்தக் கிளைக் கம்பெனி சார்பாக டர்பன் நீதிமன்றத்தில் நாற்பதினாயிரம் பவுன் தாவா ஒன்று நடந்துகொண்டிருந்தது. பிரபல வெள்ளைக்கார பாரிஸ்டர்கள் வழக்கை நடத்தினார்கள். எனினும், கம்பெனிக்காரர்களுக்கு உதவியா யிருக்கும் பொருட்டு இந்திய வக்கீல் ஒருவர் தேவையாக இருந்தது. கம்பெனியாரிடம் வழக்கு விவரங்களைத் தெரிந்துகொண்டு வழக்கை நடத்தும் பாரிஸ்டர்களுக்கு அந்த விவரங்களைத் தெரியப்படுத்த வேண்டும். இந்த வேலைக்கு ஒருவரை அனுப்ப முடியுமா?

இப்படிக் கேட்ட கம்பெனிக்குத் தாதா அப்துல்லா கம்பெனி என்று பெயர். கம்பெனியின் முதலாளி தாதா அப்துல்லா அப்போது தென்னாப்பிரிக்காவி லிருந்தார். அவருடைய கூட்டாளி சேத் அப்துல் கரீம் ஜாவேரி என்பவர்தான் போர்பந்தரிலிருந்து மேற்கண்ட கடிதத்தை எழுதினார். பிறகு அவர் ராஜகோட்டைக்கும் வந்தார். சேத் ஜாவேரிக்கு மோகன் தாஸை அவருடைய சகோதரர் அறிமுகப்படுத்தி வைத்தார்.

மோகன் தாஸுக்கு எப்படியாவது கத்தியவாரை விட்டுப் போனால் போதும் என்று இருந்தது. புதிய நாடுகளைப் பார்க்கலாம், புதிய அநுபவங்களை அடையலாம் என்னும் ஆசையும் ஏற்பட்டது. எனவே அவர் தென்னாப்பிரிக்காவுக்குப் போக உடன்பட்டார்.

"எத்தனை காலம் அங்கே இருக்கவேண்டும்? சன்மானம் என்ன தருவீர்கள்?" என்று கேட்டார்.

"ஒரு வருஷத்துக்கு மேலே அங்கு இருக்க வேண்டியிராது. போக வர முதல் வகுப்புப் பிரயாணச் செலவும் மொத்தம் 105 பவுனும் தருவோம். தென்னாப்பிரிக்காவில் கம்பெனியின் விருந்தாளியா யிருப்பீர்களாதலால் வேறு செலவு கிடையாது" என்றார் சேத் ஜாவேரி.

இதிலிருந்து தம்மை வக்கீல் என்ற முறையில் அழைக்கவில்லை யென்றும், கம்பெனியின் ஊழியராக இருக்கச் சொல்கிறார்கள் என்றும் பாரிஸ்டர் மோகன் தாஸ் தெரிந்துகொண்டார். ஒரு வருஷத்துக்கு 105 பவுன் சன்மானமும் குறைவுதான். ஆயினும் பேரம் பேசாமல் அதை ஒப்புக்கொண்டு மோகன் தாஸ் தென்னாப்பிரிக்கா செல்ல ஆயத்தமானார்.

* * *

தம்பி! இதுவரையில் காந்திஜியின் சரித்திரத்தில் விசேஷ சம்பவங்களையோ வீரதீரச் செயல்களையோ நீ காணவில்லை. வரும் இதழிலிருந்து அத்தகைய சம்பவங்களும் செயல்களும் மேலும் மேலும் தொடர்ந்து வரப்போகின்றன.

இதுவரையில் காந்திஜியின் சரித்திரத்தைக் கவனித்தால் ஒரு விஷயம் தெரிய வரும். மகத்தான ஆத்மசக்தி படைத்த ஒரு ஜீவனைப் பிரம்மா படைத்துவிட்டு, "கண் திருஷ்டி ஏற்படப்போகிறதே!" என்று பயந்து விட்டார்போலும்! ஆகையினாலேயே ஒரு சாதாரண குடும்பத்தில் அந்த மகா புருஷரைப் பிறக்கச் செய்து மிகச் சாதாரண முறையில் வாழ்க்கை தொடங்கச் செய்தார் போலும்!

சுவாமி விவேகானந்தர், மகாகவி டாகூர் முதலியவர்களைப் போல் இளம் பிராயத்திலேயே காந்திஜியின் மேதையும் மேன்மையும் சோபிக்கவில்லை. பண்டித ஜவாஹர்லாலைப் போல் மகாத்மா செல்வத்தில் பிறந்து செல்வத்தில் வளரவில்லை.

ஆனால் சிறையைத் தகர்த்தெறிந்துவிட்டு வெளிவரும் மகா வீரனைப் போல மகாத்மா காந்தியும் சாதாரண வாழ்க்கையிலிருந்து விடுபட்டுச் சீக்கிரம் வெளிவருவார். அப்போது அவருடைய வாழ்க்கையில் எத்தனையோ விந்தை நிகழ்ச்சிகளையும் வீரச் செயல்களையும் நீ காண்பாய். (தொடரும்)

## ஆலப்புழையில்-பிரபல திருமணம்



திருவேங்கடம் — சீதாலக்ஷ்மி

ஆலப்புழையில் பிரபல ஜவுளி வர்த்தகரான ஸ்ரீ பி. ராஜகோபால ரெட்டியாரவர்களின் புதல்வி சௌபாக்யவதி சீதாலக்ஷ்மிக்கும், மேற்படியூர் மற்றொரு பிரபல ஜவுளி வர்த்தகரான ஸ்ரீ எஸ். வீரய்யா ரெட்டியார் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி திருவேங்கடத்துக்கும் ஆலப்புழையில் சென்ற 6-2-48 வெள்ளிக்கிழமையன்று திருமணம் வெகு சிறப்புடன் நடந்தேறியது. மணமக்கள் இருவருக்கும், பல பக்தக்களிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் எண்ணற்ற பரிசுகளும் வாழ்த்துச் செய்திகளும் கிடைத்தன.

## தேனி, நாடார் சரஸ்வதி உயர்தர கலாசாலை அபிவிருத்தி நிதிக்காக



### ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

*

ஆஸ்தான வித்வான்

மைசூர் டி. சௌடய்யா ... பிடில்

கல்பாத்தி ராமனுதன் ...மிருதங்கம்

ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

*

**12-3-48 வெள்ளிக்கிழமை**

**மாலை 5-30 மணிக்கு**

தேனி, நாடார் சரஸ்வதி ஹைஸ்கூல் காம்பவுண்டில்

*

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தலைமை வகிப்பார்கள்

*

டிக்கெட்டுகள் :

ரூ. 250/: 100/: 50/: 25/: 10/:

நாடார் சரஸ்வதி உயர்தரக் கலாசாலைக் கமிட்டி. தேனி

ஒலிபெருக்கி: திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்

குறிப்பு:—ஏற்கனவே 20-2-48-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மேற்படி கச்சேரி நமது மாபெருந் தலைவர் மகாத்மா காந்தி அவர்களின் துக்ககரமான பிரிவை முன்னிட்டு, 12-3-48-க்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. மேற்படி கச்சேரிக்காக 30-1-48, 20-2-48 தேதிகளுக்கு வழங்கப்பட்ட டிக்கெட்டுகள் 12-3-48 கச்சேரிக்கு செல்லுபடியாகும்.

# இக்கரைக்கு

சசிதேவி

ராஜலக்ஷ்மி சொல்லுகிறாள் : * * *

யாருக்கு வாழ்க்கைப்பட்டாலும் படலாம், இந்த டாக்டராக இருப்பவருக்குமட்டும் வாழ்க்கைப் படவே கூடாது. அம்மா! இதைப் போலத் தொல்லை வேறு இல்லவே இல்லை.

நானும் பார்த்தேன், இவரைப் போன்ற கல் நெஞ்சு படைத்தவரைப் பார்த்ததே யில்லை; இவரைப் போல யாருமே இருக்க மாட்டார்கள் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

நேற்று ராத்திரி யெல்லாம் எனக்கு வயிற்று வலி. புழுவாய்த் துடித்துப் போனேன். நான் பட்ட பாடு அதோ மேலே காய்கிறானே அவனுக்குத்தான் வெளிச்சம். ராத்திரி மூன்று மணிக்கு வலி ரொம்ப தாங்க முடியவில்லை யென்று கமலாவை விட்டு அவரைக் கூப்பிடச் சொன்னேன். அப்பா! அவர் காய்ந்து விழுந்ததும், எரிந்து விழுந்ததும்—'ஏண்டாப்பா கூப்பிட்டோம்?' என்று வெறுப்பாகவே இருந்தது. எப்படித்தான் இந்த ஜனங்கள் இவரைக் கொண்டாடுகிறார்களோ, தெரியவில்லை!

ஏதோ ஒரு மண்ணாங் கட்டியைக் கொடுத்து விழுங்கச் சொல்லிவிட்டுப் போனவர் அப்புறம் எட்டிக்கூடப் பார்க்கவில்லை! இன்னொரு தரம் வந்து பார்த்துவிட்டால் அவருக்குக் குறைந்தா போய்விடும்? நான் கூட 'விஸிடிங் பீஸ்' கொடுக்க வேண்டுமா, என்ன?

வீட்டிலேதான் இந்த ஆட்டமெல்லாம்! வேறு யாராவது வந்து கூப்பிடட்டும்—ஏன், டெலிபோன் செய்தால்கூடப் போதுமே—பாதி ராத்திரியானாலும் அலறி அடித்துக் கொண்டு ஓடுவார்! 'ஏதுடா, வீட்டிலே ஒருத்தி தனியாக எத்தனை நேரம் காத்திருப்பாள்' என்று துளிக் கூடக் கவலைப் படுவது கிடையாது. இந்த விஷயத்தில் அடுத்த வீட்டு அமிர்தம் கொடுத்து வைத்தவள். அவளுடைய அகத்துக்காரரும்தான் உத்தியோகம் பண்ணுகிறார். அவர் தினம் கோர்ட்டுக்குப் போகிற அழகே போதாதா? இவரைப்போல் நிசாசர ஜென்மமா? ஈசுவரா, ஈசுவரா!

'எக்கேடாவது கெட்டுப் போகட்டும், ஊருக்குப் போயாவது ஒரு மாசம் இருந்து உடம்பைப் பார்த்துக் கொண்டு வரலாம்' என்று பார்த்தால் அதுவும்

எழுதியது]

# அக்கரை...




முடியவில்லை! ஒரு கடிதாசி கூடப் போட மாட்டார்! இரண்டு மூன்று கடிதாசி எழுதிக் கேட்டால் அப்புறம் அந்த மருந்து எழுதுகிற பாஷையிலே நாலு வரி எழுதுவார்! அதை யார் படிக்க முடியும்? அதைப் படித்துப் புரிந்து கொள்ள அந்தக் கம்பவுண்டர் சித்ர குப்தன்தான் வரவேண்டும்!

அதுவும் போகட்டும் என்று பார்த்தால், நான் ஊரிலே இல்லையென்றால் வீட்டில் பயமே இராமல் போய்விடுகிறதே! அந்த நர்ஸுகள் இங்கே வந்து அடிக்கிற கொம்மாளம் சகிக்க வில்லை என்று சமையல்காரப் பாட்டி சொல்லு கிற புகார் சகிக்கவில்லையே!

எனக்கோ உடம்பே சரியாயில்லை; ஊருக்கோ போக முடியவில்லை. இங்கேயே இருக்கலா மென்றாலோ மருந்து கிடையாது. எங்கள் ஊர் வேலுப் பிள்ளை மருந்துதான் என் உடம்புக்கு ஒத்துக் கொள்ளும். இவர் கொடுக்கிற குழாய்த் தண்ணீரையும் களிமண்ணையும் மருந்தென்று சாப்பிட நானும் என்ன ஆஸ்பத்திரி நோயா ளியா? நல்ல பிழைப்பு!

**அமிர்தம் சொல்லுகிறாள்:**

* * *

வக்கீலைக் கல்யாணம் பண்ணிக்கொண்டால் வாழ்க்கையே ஒரு வழக்காகி விடுகிறதே! அட நாராயணா!

பழக்கம் காரணமோ என்னமோ, என்னிடம் கட்சி பேசவும் வழக்காடவும் அல்லவா அவர் ஆரம்பித்து விடுகிறார்! எதற்கெடுத்தாலும் குறுக்கு விசாரணையா?

இதைக் கேளுங்கள்: நேற்றுக் காலையில் பால்காரன் தெரியாத்தனமாக இவர் இருக்கும் போது வந்துவிட்டான். 'என்ன பால்? பசும் பாலா? பசு எங்கே?' இன்னும் எத்தனை கேள்வி கேட்டார் தெரியுமா? 'பசுவைக் கண்ணால் பார்க்காமல் எப்படிப் பசும் பால் என்று நம்புகிறாய்?' என்று என்னைப் பிடித்து உலுக்கி விட்டார்! பசுவைப் பார்த்துத்தான் பால் வாங்க வேண்டும் என்றால் இந்தப் பட்டணத்தில் அது நடக்குமா? ஏதாவது தெரிந்தால்தானே! இந்தக் குறுக்குக் கேள்வி களுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டு நிற்கிறதற்கு நான்கூட இவருடைய கட்சிக் காரியா, என்ன? எதையாவது ஒன்றைக் கேட்டு வாயிலிருப்பது, வயிற்றிலிருப்பதை யெல்லாம் பிடுங்குவதில் நல்ல சூரர்! பாட்டி சொல்லுவாள், 'ஊமத்தங் காயைக் கொடுத்து உள்ளத்தை அறிவது' என்று. அது இவருக்குத்தான் சரி!

வீட்டு வாசலில் வந்து நிற்கும் காருக்கும், வண்டிக்கும் கணக்கில்லை. வக்கீல் வீட்டில் வண்டி நின்றால் அத்தனையும் காசில்லையோ? கேஸ் தோற்றால் என்ன, ஜெயித்தால் என்ன? பணமா வரவில்லை? இவர் என்னவோ 'போர்டு' மாட்டின அன்று என்ன பஞ்சப் பாட்டு பாடினாரோ, அதையேதான இன்றைக்கும் பாடிக்கொண்டிருக்கிறார்!

அடுத்த வீட்டு விஜயத்தின் கணவரும் இருக்கிறாரே, இருக்கிற இடம் தெரிகிறதா? எத்தனை அழகாக எழுதுகிறார்! எழுதத் தெரியவேதான் அவளையும் அவ்வளவு அருமையாய் வைத்துக்கொண்டிருக்கிறார். நம் அகத்திலேயோ? ஏ அப்பா! ஊர்ச் சண்டை, எலெக்ஷன் சண்டை, சினிமாச் சண்டை எல்லாம் பேசிப் பேசி வீடே யுத்தகளமாக விளங்குகிறது! பேசப்போதெல்லாம் என்னவோ கோர்ட்டிலே பேசுகிற ஞாபகமாக எதிரில் இருப்பவற்றையெல்லாம் குத்திக் குத்தி உடைக்கிறார்!

ஊரிலே நடக்கும் சச்சரவுகளிலெல்லாம் இவரைப் போல் இருக்கிறவர்களுக்கு லாபம்தானே! எதிலேயும் திருப்தி கிடையாது. வீட்டிலே குப்பை அடைய எவ்வளவு புஸ்தகம் வேண்டுமோ அவ்வளவும் வாங்கி வைத்திருக்கிறார். அதையெல்லாம் எப்பொழுது படித்து எப்பொழுது கரை காண்பது? தற்சமயம் பகலிலே படுக்கும்போது தலைக்கு உயரமாக வைத்துக் கொள்ள உபயோகமாக இருக்கிறது!

எத்தனை படித்துத்தான் என்ன? குழந்தைகள் கோபுவும், ராமுவும் சண்டை போட்டுக் கொண்டு வந்தால் ஏதோ சமாதானமாகச் சொல்லத் தெரியாமல், எந்தக் கட்சியாவது ஒன்றை எடுத்துக்கொண்டு பிரமாதமாகப் பேசித் தன் தொழில் முறையையெல்லாம் காட்டிக் கத்திப் பாய்கிறார்! சமாதானம் பண்ணக் கடைசியிலே நான்தான் வர வேண்டும்!

என்னவோ போ! சுகமில்லை, அவ்வளவுதான்!

### விஜயம் சொல்லுகிறாள்: * * *

பெண்ணாய்ப் பிறந்தாலும் எதிர் வீட்டு மகாலக்ஷ்மியைப்போல் பிறக்க வேண்டும்! என்ன பாவம் பண்ணியோ தான் எழுத்தாளரை மணக்கிறார்கள்! எதிர் வீட்டில் எப்பொழுதும் சங்கீதமயமாக என்ன ஆனந்தமாயிருக்கிறது!

பேனாவும், கையுமாக இந்த உலகத்துச் சிந்தனையேயில்லாமல் உட்கார்ந்து கொண்டிருப்பவரைப் பற்றி என்னதான் சொல்வது? இதையெல்லாம் இவரானால் வர்ணித்து எழுதி எழுதிக் கூடை நிறைந்து வழியும்படி செய்துவிடுவார். என்னால் முடியுமா?

இரவு எப்பொழுதுதான் படுப்பாரோ, தெய்வத்துக்குத்தான் தெரியும்! ஒரு நாளாவது ஒரு சிரிப்போ, இன்சொல்லோ உண்டா? கிடையாது! கதா பாத்திரங்களின் சல்லாபத்தில் நூறில் ஒரு பங்காவது அவர் வாழ்க்கையில் உண்டா? அவருடைய கதாநாயகிகளைப்போல் அன்ன நடையும், மின்னலிடையும், மேகம்போல் கூந்தலும், வண்டைப்போல் கண்ணும் எனக்கும் இருந்தால் என்னையும் அன்புடன் கொஞ்சுவாரோ என்னவோ? அடுத்த வீட்டு ஜெயம் இவருடைய கதைகளைப் படித்துவிட்டு என்னைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறாள்! அதெல்லாம் கதைகளிலேதான், நடைமுறையிலே இல்லை என்பது அவளுக்கு எப்படித் தெரியப் போகிறது?

நானாவது தினமும் கொஞ்ச நேரம் செடிகளையும், நிலாவையும் பார்த்துக் கொண்டு நிற்பேன். காவேரியிலே புது வெள்ளம் வந்தால் ஆசையாகப் போய்ப் பார்த்துக் கொண்டே மணிக் கணக்காக நின்று விடுவேன் — அம்மாகூட எத்தனையோ தடவை அதற்காக என்னைத் திட்டியிருக்கிறாள்! ஆனால் இவரோ சென்னைப் பட்டணத்து இருட்டு அறையை விட்டுச் சற்றுக்கூட வெளியிலேயே வராமல் நிலவின் சுகத்தையும், புயலின் வேகத்தையும், அருவியின் அழகையும் வர்ணிக்கிறாராமே! அது எப்படி முடியும்? இதிலிருந்தே எல்லாம் பொய்யென்று தெரியவில்லையா?

போன வருஷம் நான் தஞ்சாவூருக்குப் போயிருந்தபோது நாலு வரிக் கடிதம் கூடக் கிடையாது! கேட்டால் சோம்பலாக இருக்கிறது என்கிறார்! கதையும் கட்டுரையும் எழுத மாத்திரம் அந்தச் சோம்பல் எங்கே போய்விட்டதோ?

எழுதி எழுதி உருக் குலைந்து, கண்கள் குழி விழுந்து, வேளைக்குச் சாப்பிடாமல், தூங்காமல், உடம்பைக் கெடுத்துக் கொண்டு, அவர் கதையில் வரும் கதாநாயகனுக்கு நேர்விரோதமாகத்தான் இருக்கிறார். நான் மாத்திரம் எப்படி அவருடைய கற்பனைச் சுந்தரியாக இருக்க முடியும்?

### மகாலக்ஷ்மி சொல்லுகிறாள்: * * *

ஒரு சங்கீத வித்வானைக் கல்யாணம் பண்ணிக்கொள்வது எவ்வளவு அசட்டுத்

தனம் என்று இப்போது அல்லவா தெரிகிறது!

இவருக்குத்தான் என்ன ரோதனையடாப்பா! வேளையில் சோறுண்டா, தூக்கமுண்டா? இரவில் ஒரு மணிக்குப் படுக்கை, எழுந்து பல் தேய்க்கும்போது பத்து மணி! சே, நரக வேதனைதான்!

சேர்ந்தாற்போல் நாலு நாள் ஊரிலே இருக்கிறாரா? எப்பொழுது பார்த்தாலும் பாட்டும் கூத்தும் மாடி இடிகிறதே! பாதி நாட்கள் தொண்டை கட்டு, மருந்து, மாயம் — நன்றாக இருந்த நாளே கிடையாது!

அன்றைக்குச் சபாவிலே விஜயம் சொன்னாள்: "உனக்கென்னடியம்மா! எப்போ பார்த்தாலும் பாட்டு கேட்கலாம்" என்று. கைக் குழந்தை அழுதால் கூடக் கொஞ்சநாழிகை பொறுமையாய்க் கேட்டுக்கொண்டிருப்பேன்; இந்தப் பாட்டை யார் உட்கார்ந்து கேட்டுச் சகிப்பது? காது கொப்புளித்து அல்லவா போய்விட்டது!

மூந்தா நாள் பிடில் ராமய்யர் வந்திருந்தார். மாடியில் இருவரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். நான் அப்பளம் காய வைக்கத் தற்செயலாக மாடிக்குப் போனேன். என்னமோ 'கலாவதி' 'கனகாங்கி' 'ரமாவதி' என்று காதில் விழுந்தது. இதெல்லாம் எத்தனை நாளாக ஏற்பட்டுவிட்டதோ என்று மனசு கிடந்து அடித்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டது. மூச்சே சரியாய் வரவில்லை. நெஞ்சிலே என்னமோ உறுத்திக்கொண்டேயிருந்தது.

அப்புறம் விஜயம் அல்லவா சொன்னாள், "சபாவிலே 'கலாவதி' ரொம்ப நன்றாய் பாடினார்!" என்று? இதெல்லாம் ராகத்தின் பெயராமே! அட ஈசுவரா! போயும் போயும் பொம்மனாட்டிகள் பெயரையா வைக்கணும்! என்னவெல்லாம் சந்தேகம் வந்துவிட்டது எனக்கு! நல்லவேளையடியம்மா!

வீட்டைக் கவனிக்க முடிகிறதா? நாள் கிழமை உண்டா? தகப்பனார் சிராத்தம்கூட எங்கு நேருகிறதோ அங்குதான்!

இந்த அழகிலே சேர்ந்தாற்போலே இரண்டு கச்சேரிகளுக்குப் போகவில்லை என்றாலோ வந்துவிட்டது ஆபத்து! "மண்டை கிறுக்கு; தொண்டை போயிடுத்து!" என்றெல்லாம் பட்டம் கட்டிவிட்டு விடுகிறார்கள்! என்ன செய்வார் பாவம்!

எதிர்வீட்டு ராஜலக்ஷ்மியின் அகத்துக்காரரைப் போல் டாக்டரா என்ன, இராக்கி பண்ணிக்கொண்டால் கூட எல்லோரும் வந்து கெஞ்சுகிறார்கள். இந்தப் பிழைப்பும் ஒரு பிழைப்பா?

வீட்டிலே இந்தச் சிஷ்யன்கள் பண்ணுகிற அட்டகாசம் சகிக்கவே முடியவில்லை, போ! எப்பொழுது பார்த்தாலும் பாட்டைப் பற்றியேதான் பேச்சு. குழாயை நிறையத் திறந்தால் சத்தம் கேட்டுச் சுருதி சேரவில்லையாம்; துணி துவைத்தால் தாளம் தப்பிவிடுகிறதாம்! என்ன வேண்டியிருக்கிறது!

மொத்தத்திலே இந்த ஸ-ரி-க-ப-நி-பாடிப் பாடி வீடே விடியவில்லை, போ!

---

காந்தி மகான் திருவாக்கு—7

## தீபம் எரியட்டும்!

சத்தியமும் அஹிம்சையும் எப்படி ஒன்றை விட்டு மற்றொன்று பிரிக்க முடியாதனவோ, அதைப்போல அசத்தியமும் ஹிம்சையும் ஒன்றை விட்டு மற்றொன்று பிரிக்க முடியாதனவாகும். சிந்தனையிலும் செய்கையிலும் பேச்சிலும் எப்போதும் பரிபூரணமாக அஹிம்சையை அநுஷ்டிக்க நமக்குச் சக்தி இல்லாதிருக்கலாம். ஆனால், அஹிம்சையைத்தான் நம்முடைய இலட்சியமாக வைத்துக்கொள்ள வேண்டும். அந்த இலட்சியத்தை நோக்கிக் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேற வேண்டும். உண்மையான சுதந்திரத்தை அடைவதற்கு அஹிம்சை ஒன்றுதான் வழி என்று கருதுபவர்கள், தற்போது எங்கும் சூழ்ந்திருக்கும் கனந்தகாரத்துக்கு மத்தியில் அஹிம்ஸா தீபம் பிரகாசித்துக் கொண்டிருக்கும்படி பார்த்துக் கொள்ளட்டும். சத்தியத்தை ஒரு சிலர் அநுஷ்டித்தாலுங் கூட, அதற்கு மதிப்பு உண்டு; அளவில்லாத சக்தியும் உண்டு. ஒரு சிலருடைய சத்தியத்துக்கு முன்னால் லட்சக் கணக்கானவர்களுடைய அசத்தியம், காற்றில் அடிபட்டுப் போகும் உமியைப்போல மறைந்து போய்விடும்.

# போக்கிரி கிட்டு

விஜயம்

கிட்டு மிகவும் விஷமம் செய்வான். காலையில் எழுந்தது முதல் இராத்திரி படுக்கப் போகும் வரையில் விஷமம் செய்யாமல் அவனால் ஒரு விநாடி கூடச் சும்மா யிருக்க முடியாது. ஆனால் அவன் செய்யும் விஷமம் புத்தி சாலித்தனம் கலந்ததா யிருக்கும். அவனது துஷ்டத்தனம் தாங்க முடியாமல் அவனை அம்மா அடிக்கப் போவாள்; அப்பொழுது கிட்டு ரொம்ப சாதுர்யமாகப் பதில் சொல்லுவான். அதைக் கேட்டதும் அம்மாவின் ஓங்கின கை அப்படியே நின்று விடும். அவள் 'குபீர்' என்று சிரித்து விடுவாள். கிட்டுவுக்கு அப்புறம் ஏன் அடி விழுகிறது?

கிட்டுவின் சாதுர்யமான விஷமங்களில் சிலவற்றைக் கேட்டால் நீங்களும் ரஸிப்பீர்கள்; சிரிக்கவும் செய்வீர்கள். சொல்லட்டுமா?

ஒருநாள் கிட்டு எதிர் வீட்டு முரட்டுப் பையனோடு சண்டை பிடித்து விட்டான். சின்னப் பையன்கள் விஷயம் முற்றிப் பெரியவர்கள் வரையில் வந்துவிட்டது. கடைசியில் எல்லோரும் ஒருமாதிரி சமாதானம் ஆனார்கள்.



ஆனால் கிட்டுவின் அம்மாவுக்கு மாத்திரம் கோபம் தாங்கவில்லை. கிட்டுவுக்கு இரண்டு அறை கொடுத்துப் புத்தி சொல்ல வேண்டும் என்று நினைத்து அவனைத் தேடினாள். அவன் இலேசில் அகப்படவில்லை. கடைசியில் வெகுநேரம் கழித்து எதிர் வீட்டுப் பையனோடு கைகோத்துக் கொண்டு அவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

"கிட்டு, எங்கேயடா போனாய்? உன்னை எத்தனை நேரம் தேடுவது? அது இருக்கட்டும், எதிர் வீட்டுப் பையனை நீ அடித்தாயா? அவன் வீட்டில் பிரமாதமாகச் சண்டைக்கு வந்து விட்டார்களே!" என்று அம்மா கோபத்தோடு கேட்டாள்.

"இல்லை, அம்மா! நான் அவனை அடிக்கவில்லை; அவன்தான் என்னை முதலில் அடித்தான். அடித்து விட்டு ஓரேயடியாக அழ ஆரம்பித்து விட்டான், துஷ்டன்!"

"சரி, அவன்தான் துஷ்டப் பையன் என்று தெரியுமே! நீ ஏன் மறுபடியும் அவனோடு சேர்ந்து விளையாடப் போகிறாய்? இனிமேல் போகாதே, என்ன?"

அம்மாவின் கோபமான இந்த உத்தரவைக் கேட்டு, கிட்டு கொஞ்சம் திடுக்கிட்டான். ஆனால் அடுத்த நிமிஷமே இவன் சமாளித்துக் கொண்டு, "ஏன் அம்மா, அந்தப் பையன் தானே பொல்லாதவன்? நான் நல்ல பையன்தானே?" என்று கேட்டான்.

"ஆமாம், எதற்காக இப்போது அந்தக் கேள்வி?"

"இல்லை, அந்தப் பொல்லாதவன் வேண்டுமானால் நல்லவனான என்னுடன் வந்து விளையாடட்டுமே!"

இப்படிக் கிட்டு சொன்னதும் அம்மா குபுக்கென்று சிரித்து விட்-

டான். அவன் கோபமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

இன்னொருநாள் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் கிட்டுவை ஒரு கேள்வி கேட்டார்.

"கிட்டு, திடீரென்று கடவுள் உன் முன்னால் தோன்றி 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டால் நீ அவரை என்ன கேட்பாய்?"

"நிறையப் பணம் வேண்டும் என்று கேட்பேன்!" என்றான் கிட்டு.

"முட்டாள்! அது தவறு. நானாயிருந்தால் என்ன கேட்பேன் தெரியுமா? 'புத்தியைக் கொடு' என்று கேட்பேன்!"

"அது சரிதான், ஸார்! அவரவர்களுக்கு எது வேண்டுமோ அதைத்தானே கேட்பார்கள்?" என்று கிட்டு பளிச்சென்று பதில் கொடுத்தான். வகுப்பில் இருந்த மாணவர்கள் எல்லாரும 'கொல்' லென்று சிரித்து விட்டார்கள். அசட்டுக் களையுடன் உபாத்தியாயரும் சிரிப்பில் கலந்து கொண்டார்.

மற்றொருநாள் கிட்டுவுக்கு அம்மா பட்டாணிக் கடலை கொடுத்தாள். கிட்டு அதைத் தின்ன ஆரம்பித்தானோ இல்லையோ, அவனுடைய தோழர்கள் எல்லோரும் ஓடிவந்து அவனை விளையாட அழைத்தார்கள். விளையாடும்போது பட்டாணி தின்னச் சௌகரியப்படாது என்று கிட்டு ஒரு யோசனை செய்தான். தாத்தாவிடம் ஓடி "தாத்தா, இந்தப் பட்டாணிக் கடலையைக் கொஞ்சம் வைத்திருந்து நான் அப்புறம் வந்து கேட்கும்போது கொடு, நான் விளையாடப் போகிறேன்!' என்றான்.



"ஏண்டா போக்கிரிப் பயலே, பட்டாணியைக் காவல் காக்கும் உத்தியோகத்துக்கு நான்தான் உனக்கு அகப்பட்டேனா? அம்மாவிடமே கொடுத்துவிட்டு அப்புறம் வாங்கிக் கொள்ளுவதற்கென்ன?" என்று கேட்டார் தாத்தா.

"அது சரிதான், தாத்தா! அம்மா, அக்கா இவர்களிடமெல்லாம் கொடுத்தால் என் பட்டாணி என்னிடம் திரும்பிவரும் என்பது என்ன நிச்சயம்? பல் இல்லாத உன்னிடம் கொடுத்து வைத்தால்தான் என் பட்டாணி பத்திரமாகத் திரும்பிவரும், இல்லையா?" என்றான் கிட்டு.

இந்தப் பதிலைக் கேட்டதும் தாத்தா தன் பொக்கை வாயைத் திறந்து 'ஹஹ்ஹ ஹஹ்ஹ ஹா' என்று சிரித்து விட்டார். ஏன், அவருக்கு அருகிலிருந்த எல்லோருந்தான் சிரித்தனர். உங்களுக்கும் சிரிப்பு வருகிறது, இல்லையா?

---



## பார்த்த ஞாபகம்!

ராமு:—சீனு! இவரை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே, யார் இவர்?

சீனு:—ஆமாம். அவரை உனக்கு எங்கேயோ பார்த்த மாதிரிதான் இருக்கும்! நீ டிராயிங் கிளாசுக்குப் போனால்தானே அவரை உனக்குத் தெரியப் போகிறது! அவர்தான் நம் டிராயிங் வாத்தியார்!

# அடமின்

அதிக ஜீவசத்துள்ள சுறுமீன் எண்ணெய்.

## தேகாரோக்யத்தையும் புஷ்டியையும் அளிக்கும்

சிறந்த ஆரோக்யத்துக்கு ஏ & டி விடமின்கள் ஏராளமாக அவசியம். பூரண ஆரோக்யமும் அபூர்வ வலிமையும் தரும் சிறந்த டானிக் என்று அடமின் விடமின் ஆயில் நிரூபணமாயுள்ளது.




அனுபானம்: 5 முதல் 10 துளிகளை ஒரு அவுன்ஸ்பால் அல்லது ஆரஞ்சு ரசத்தில் கலந்து தினசரி 3 முறை சாப்பாட்டுக்குப் பின்னர் உட்கொள்ளவும்.

**கவர்ன்மெண்டு ஆயில் பாக்டரி**

**காலிகட்**

ADS.

சென்னை மாகாணத்துக்கும், அதன் அருகாமையிலுள்ள சமஸ்தானங்களுக்கும் ஏஜண்டுகள்:

மெஸர்ஸ் பாரி அண்டு கோ., லிமிடெட் சென்னை




"அழகு, படிப்பு, அந்தஸ்து இவையெல்லாம் இருந்து என்ன செய்வது? காலாகாலத்தில் எல்லோரையும் போல் நமக்கும் கல்யாணம் நடந்திருந்தால் குடும்பம் எவ்வளவு குதூகலத்துடன் இருக்கும்? வாழ்க்கை என்று ஒன்று ஏற்பட்டுவிட்டால்—ஆஹா! அப்புறம் அதன் மதிப்பே அலாதிதான்! அப்பாவும் அம்மாவும் என்ன செய்வார்கள், பாவம்! நாம்தான் அம்மாஞ்சியைக் கட்டிக் கொண்டு அழுகிறோம். எல்லாம் நம் துர்ப்பாக்கியம்! எதற்கும் வேளை வரவேண்டாமா? அந்த மனுஷ்யர் நம்மை அடியோடு மறந்து விட்டார் போலிருக்கிறதே! போட்ட கடிதங்களுக்கெல்லாம் ஒரு பதிலையும் காணோமே!"

இவ்விதம் ஏதேதோ எண்ணி மனம் புழுங்கிக் கொண்டிருந்த பானுமதி, தன் தந்தையின் குரலுடன் யாரோ ஒரு பரிச்சயமில்லாத புதுக் குரலும் சேர்ந்து கேட்கவே, மெல்ல அறையினுள் எட்டிப் பார்த்தாள்.

சிறிது நேரம் சென்றதும் அவளுக்கு விஷயம் பூராவும் விளங்கிவிட்டது. தன் தகப்பனார் பத்திரிகையில் விளம்பரம் செய்ததின் பயனாக, அந்த ஆசாமி தன்னுடைய வீட்டில் சமையல் வேலை செய்வதற்கு வந்திருக்கிறான் என்பதை அவள் அறிந்து கொண்டு விட்டாள்.

சமையற்காரனைக் கண்டதும் நாகராஜ ஐயருக்கு ஏதோ காணாததைக் கண்டது மாதிரி அவ்வளவு சந்தோஷமாக இருந்தது. காரணம், அப்போதுதான் காலேஜ் படிப்பு முடிந்து வீட்டிற்கு வந்திருக்கும் தம் ஒரே பெண்ணுக்குச் சமையல் செய்யும் சிரமம் கூட இனி கிடையாது என்னும் ஒரே எண்ணம்தான்!

அதற்கேற்றாற்போல் பானுமதி உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்னாலேயே இட்ட வேலையைச் செய்ய எதிர்பார்த்துக் காத்துக் கொண்டு நிற்பான் சங்கரன். அந்த நிலையில் அவனைக் காணும் போதெல்லாம் பானுமதிக்கு ஏனோ சிரிப்புச் சிரிப்பாக வந்தது!

★

ஒரு நாள் பானுமதி தன் சிநேகிதிகளுடன் அரட்டையடித்துக் கொண்டிருந்தாள். அப்போது சங்கரன் 'டிபன்' கொண்டு வருவதற்குக் கொஞ்சம் நேரமாகிவிட்டது. அவ்வளவுதான்; பானுமதிக்கு வந்து விட்டது கோபம். "என்ன காரணம், நம் ஐ. ஸி. எஸ். ஆபீஸர் வர இவ்வளவு 'லேட்' ஆகிறதே!" என்றாள் தன் சிநேகிதிகளிடம் கேலியாக.

மற்றவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. "ஐ. ஸி. எஸ். ஆபீஸரா! அது யார் அது?" என்று ஆச்சரியத்துக்குள்ளானார்கள் அவள் தோழிகள்.

அதற்குள், "என்ன யோசிக்கிறீர்கள்? இன்னும் நீங்கள் அந்த ஐ. ஸி. எஸ். யார் என்று தெரிந்து கொள்ளவில்லையா? அடடே, நம்ப சமையற்காரச் சங்கரனைத்தான் சொல்லுகிறேன்!" என்று கூறிச் சிரித்தாள் பானுமதி. அதே சமயத்தில் பலகாரத் தட்டுடன் அங்கே வந்த சங்கரன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது!



சென்ற பிப்ரவரி 16-ல் சைதாப்பேட்டையில், காந்தி மகான் பெயரால் அவர் மனதுக்கு உகந்த திருப்பணி ஒன்று ஆரம்பமாயிற்று. சென்னை மேயர் டாக்டர் கிருஷ்ணாராவ் அவர்களால் 'காந்திஜி நர்ஸிங் ஹோம்' ஆரம்பித்து வைக்கப்பட்டது. இந்த ஸ்தாபனத்தில் ஏழைகளுக்கும் செல்வர்களுக்கும் இடம் இருக்கும் வரையில் சமமான வைத்திய சிகிச்சையும் பணிவிடையும் அளிக்கப்படும் என்று அறிகிறோம்.

இப்படி அடிக்கொரு முறை தன்னுடன் வம்பளக்கக் கூடும் பெண்களுக்கு எதிரே தன்னைப் பாலுமதி 'கலாட்டா' பண்ணுவதைப் பார்க்கப் பார்க்கச் சங்கரனுக்கு ஒரே வெறுப்பாயிருந்தது. "இந்தப் பிடாரியிடம் நாம் ஏன் வந்து அகப்பட்டுக் கொண்டோம்? என்னமோ சீமையிலிருந்து ஒரே வழியாய் தப்படியே சேர தாவிக் குதித்து வந்து விட்டாற்போலல்லவா பேசுகிறாள் இவள்!" என்று நினைத்தான் அவன். இவ்விதம் நினைத்ததும் ஏதோ ஒருவித அசதி ஏற்பட்டது அவனுக்கு. கிஷ்டத்துக்கு கிஷ்டப் பொறுத்துப் பார்த்தான். அதுவும் படித்தவள் சைக்கிரட் தன்னைப் பற்றி அவ்வளவு தூரம் வரம்பு மீறி வசனம் செய்த கொடுமையைக் காதால் கேட்டவுடன் அந்த ஒரு முடிவுதான் தோன்றியது அவனுக்கு.

"நீலா, எங்க வீட்டுக் 'குக்'கைப் பார்த்தாயோ? அசல் கர்நாடகம்! இந்த இருபதாம் நூற்றாண்டில் — அதுவும் அணுகுண்டு சகாப்தத்தில் — இப்படிக் குடுமியும் இடுமியுமாக ஒருவன் இருந்தால் அவனை என்னதான் செய்கிறது?"

மேற்கொண்டு இன்னும் ஏதாவது சொல்லியிருப்பாள் அவள். அதற்குள் பொறுமை இழந்து விட்ட சங்கரன் கையில் மூட்டை முடிச்சுடன் அவளுக்கு முன்னால் தோன்றி, "அம்மா! எனக்கு உத்தரவு கொடுங்கள்!" என்றான். அடுத்த கணம் அவன் அவளுடைய பதிலையும் எதிர்பார்க்கவில்லை; வேலை செய்த ஒருமாசச் சம்பளத்தையும் வாங்கிக் கொள்ளவில்லை. பேசாமல் கம்பி நீட்டிவிட்டான்!

★

மப்பு மந்தாரத்திற்குப் பின் வெளிக் கிளம்பும் வெய்யிலைப் போல, அன்று தன் அம்மாஞ்சியிடமிருந்து வந்திருந்த கடிதத்தை வெகு அவசரமாக உடைத்துப் படிக்க ஆரம்பித்தாள் பாலுமதி. ஒவ்வொரு வார்த்தையையும் மேற்கொண்டு தொடர்ந்து படிக்கப் படிக்க அவள் உடல் நடுங்கியது; நெஞ்சு தழுதழுத்தது; கண்களில் நீர் நிறைந்து வழிந்தது.

பாலு, உன் மனோரதம், எதிர்கால வாழ்வின் திட்டங்கள் முதலியவைகளைத் தக்க சமயம் நான் பூராவும் தெரிந்து கொண்டேன். 'ஸூட், பூட்' அணிந்து ஆடம்பரத்துடன் முன்பெல்லாம் காலேஜுக்குப் போய்க்கொண்டிருந்த அந்த ராமகிருஷ்ணன் அல்ல நான் இப்போது; முற்றிலும் வேறு. ஆனால் நீ இன்னும் சிறு குழந்தை போலவே இருக்கிறாய். வளமேறிய உன் பெண் உள்ளம் இன்னும் நம் இந்தியப் பண்பில் நிலைக்கவில்லை. ஆங்கிலேயர்கள் நம் நாட்டை விட்டு மூட்டை கட்டிக்கொண்டு கிளம்பின பிறகும், நவீன நாகரிகத்தில் அந்நியரைப் பின்பற்றும் எண்ணம் இன்னும் உன்னை விட்டு அகலவில்லை போலிருக்கிறது!......

......ஏதோ சொல்ல வந்தவன் எதையோ எழுதி விட்டேன். அங்கிருந்து வந்து குவிந்த உன் கடிதங்களைக் கண்டதும், அவை பற்றி என் நண்பனிடம் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தேன். அப்பொழுது தற்செயலாகப் பத்திரிகையைப் புரட்டுகையில், உன் தந்தை சமையற்காரன் தேவை என்று விளம்பரப்படுத்தியிருந்ததை இருவரும் கண்டோம். அதைக் கொண்டு நான் ஒரு உபாயத்தைக் கையாள நினைத்தேன். அதற்கு உதவி புரிவதாக வாக்களித்தான் என் தோழன்.

நான் அம் முறையைக் கையாள எண்ணியது என் சுயநலத்திற்காகவேதான். அதன் மூலம் நான் வாழ்க்கைப் பாதையில் அகப்

பட்டுத் தவிக்காதிருக்க முன் கூட்டியே ஜாக்கிரதையாகிவிட்டேன். உன் வீட்டுக்கு வந்திருந்த சமையற்காரன் யார் தெரியுமா? என் நண்பன் சங்கரன்தான்!

மிகவும் சொற்ப நாட்களே உன்னிடம் வேலை செய்த அவனிடம் கொஞ்சம்கூடப் பச்சாத்தாபமின்றிப் படாடோபமாயும், டாம்பீகமாயும் நடந்து கொண்ட நீ உன் ஆயுள் முழுவதும் உன்னைக் கட்டிக்கொண்டு அழுபவனிடம் எப்படி நடந்துகொள்வாய்? இதைச் சற்றுத் தனியே ஆர அமர உட்கார்ந்து நீயே சிந்தித்து உணர்ந்துகொள்!

ராமகிருஷ்ணன்.

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் அவள் அப்படியே விம்மித் துடித்தாள்.

"எவ்வளவு மடத்தனமாக நாம் நடந்து கொண்டு விட்டோம்? அம்மாஞ்சியுடன் நடத்தப்போகும் வாழ்க்கையைக் குறித்து நாம் கட்டி வைத்த மனக் கோட்டைகளைத் தும் அப்படியே இடிந்து போக வேண்டியதுதானா? ஒருவேளை நாமே நேராகப் போய் அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் ......?"

இப்படி எண்ணி மனம் நொந்து அனலில் புழுவெனத் துடித்துக் கொண்டிருந்த சமயம், "நீதான் பாலு, அதிர்ஷ்டக்காரி!" என்ற தன் தந்தையின் பரிவு கலந்த குரல் குறுக்கிட்டது.

ஏதோ சுபச் செய்தியை அறிவிக்க அறைக்குள் நுழைந்த சங்கரராஜ ஐயர், தேம்பிய வண்ணம் இருந்த தம் மகளைக் கண்டதும் என்னவோ ஏதோவென்று கலங்கி விட்டார். பேசாமல் தன்னிடமிருந்த கடிதத்தை அவரிடம் நீட்டினாள் பாலுமதி.

கடிதத்தை வாசித்த ஐயருக்குச் சிரிப்பு தாங்கவில்லை. "ஏமாந்து விட்டாய், பாலு! உன் அம்மாஞ்சியும் பலே பேர்வழிதான்!" என்று கொஞ்சம் பரிகாசமாய்க் கூறி, தனக்கும் அன்று அம்மாஞ்சியிடமிருந்து வந்திருந்த கடிதத்தை அவளிடம் நீட்டினார்.

அன்புள்ள மாமா
அவர்களுக்கு.

நமஸ்காரம். தங்களுக்குக் கடிதம் எழுதிய சமயம் பாலுவுக்கும் ஒரு கடிதம் எழுதியுள்ளேன். அதைக் கண்டு ஏதேதோ எண்ணி ஏங்கி நிற்கப் போகிறாள், அவள்! ஆனால் நம் நிலைக்கு ஒவ்வாத சிற்சில துர் எண்ணங்கள் அவள் கண்களை மறைத்து நிற்கின்றன. அத்தகைய மாயத் திரையை அறுத்தெறியவே இம்முறையைக் கையாளச் சந்தர்ப்பங்கள் எனக்கு உதவி புரிந்தன.

நாளை விடிந்தால் ஐப்பசி: முகூர்த்தத்திற்குகந்த பேஷான மாதம்! மற்றவற்றை நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்!

தங்கள்

ராமகிருஷ்ணன்.

இதைப் படித்ததும்தான் பாலுவுக்குப் போன உயிர் திரும்பி வந்தது. "ஒரு சமையலுக்காகச் சமையற்காரனாக நடிப்பதற்குக் கூடத் துணிந்த அந்தச் சங்கரனை இங்கே படுத்தியது போதாது; கல்யாணமாகட்டும், அந்த மனுஷனை என்ன பாடு படுத்தி வைக்கிறேன், பார்!" என்று தனக்குள் கருவிக் கொண்டாள் பாலுமதி. அதற்கப்புறம் ஒரு நொடிகூட அவள் அங்கு நிற்கவில்லை. அதற்குள் எங்கிருந்தோ நாணம் வந்து அவளைப் பற்றிக் கொண்டது. அவ்வளவுதான்; மின்வெட்டுப்போல எங்கோ ஓடி மறைந்து விட்டாள் மிஸஸ் ராமகிருஷ்ணன்!






ஒரு நாளாவது தம் வீட்டிலோ, தம்முடைய செலவிலோ அரை கப் காப்பி கொடாத என் நண்பர் கருணாநிதி, அன்று என்னைத் தம் வீட்டுக்குள் வரச்சொல்லி இரண்டு அதிரஸமும் ஒரு கப் காப்பியும் கொடுத்தால் எனக்கு எப்படி யிருக்கும்? என் மனம் அபரிமிதமாகக் குளிர்ந்து விட்டது. "என்ன விஷயம்?" என்று விசாரித்தேன். "உங்களிடம் தமிழகராதி இருக்கிறதா, ஸார்?" என்று கேட்டார். "இருக்கிறது; நாளைக்குக் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு வந்தேன்.

சில வேளைகளில் உண்டாகும் உள்ளக் கிளர்ச்சியிலே இப்படித்தான் எதாவது ஒன்றை உளறி விடுகிறோம். பிறகுதான் தெரியாமல் சொல்லி விட்டோமே என்று வருத்தப் படுகிறோம். இப்படிப்பட்ட வருத்தம்தான் மறுநாள் காலை ஒன்பது மணிக்கு என் மனதில் உண்டாயிற்று.

தமிழ் அகராதியுடன் சைக்கிளில் ஏறி ஒரு மைலுக்கப்பாலுள்ள ஒரு வீட்டிற்குப் போய்விட்டு வருவதில் என்ன கஷ்டம் என்று நீங்கள் நினைக்கலாம். நடந்ததைச் சொல்லுகிறேன்; கேளுங்கள்.

அன்று காலை எட்டு மணிக்கு அகராதியைத் தேட ஆரம்பித்தேன். மணி 8.30 ஆகியும் அதைக் கண்டுபிடித்தபாடில்லை. 'முழுப்பூசனிக்காயைச் சோற்றில் மறைக்க முடியாது' என்று சொன்ன மகான், என்னுடைய சிறிய வீட்டில் அந்தப் பெரிய தமிழகராதியை நான் தேடின காட்சியைப் பார்த்திருக்க வேண்டும்.

'இவ்வளவு பெரிய புத்தகம் எப்படி மாய மாய்ப் போனதோ!' என்று பெருமூச்சு விட்டேன். என் பிரலாபத்தைக் கேட்ட வீட்டுக்காரி, "எந்தப் பெரிய புத்தகம்?" என்று கேட்டாள்.

"டிக்ஷனரி" என்றேன். 'அகராதி' என்று சொன்னால் அவளுக்கு விளங்காது! "அதுவா! மசாலைப் பெட்டியின் அடியிலே இருக்கிறது, பாருங்கள்!" என்றாள்.

அந்தப் பெட்டியின் ஒரு கால் ஒடிந்து போனதால், அதற்குப் பதிலாக அவள் அகராதியை அண்டை கொடுத்து வைத்திருந்தாள்!

இதனால் எங்களுக்குள் ஒரு தர்க்கம் உண்டாயிற்று. "வீட்டுக்கு உபயோகமான பொருளையெல்லாம் இப்படி மற்றவர்களுக்குக் கொடுத்துவிட்டால் நான் குடித்தனம் பண்ணின மாதிரிதான்!" என்று அவள் முனகினாள். இப்படிப்பட்டவள் தான் செய்தது தவறு என்று ஒப்புக் கொள்வாளா?

எரிச்சலுடன் வெளியே வந்தேன். சைக்கிளை உருட்டினேன். முன் சக்கரத்தில் காற்று இல்லை. ஆகவே, சைக்கிள் கடைவரையில் அதை உருட்டிக் கொண்டு போக வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

ஒரு கையால் சைக்கிளை நடத்திக் கொண்டு, மறு கையால் அகராதியைத் தூக்கிக்கொண்டு தெருவழியே போய்ப் பார்த்தவர்களுக்குத்தான் நான் பட்ட கஷ்டம் தெரியும். கணித பாடத்திலே ஒரு யந்திரத்தின் மதிப்பு வருடந்தோறும் இத்தனை சதவீதம் குறையும் என்று ஒரு கணக்கு படித்திருப்பீர்கள். அகராதியை ஒரு கையில் தூக்கிக் கொண்டு நடந்தால், நடக்கிற ஒவ்வொரு கெஜத்திற்கும் அதன் பளுவானது சதவீதம் கூடுகிறது என்பது என் அனுபவம்.

மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங் காற்றைக் கவிகளும் எழுத்தாளர்களும் எப்படியெல்லாமோ பிரமாதப்படுத்தி எழுதி விடுகிறார்கள். அந்த மெல்லிய பூங்காற்று அன்று என் வேஷ்டியுடன் விளையாடி, சைக்கிளின் சக்கரக் கம்பிகளுடன் அதை அடிக்கடி பிணைத்ததைப் பார்த்திருப்பார்களானால், அவர்கள் அவ்வாறு கவி புனைவார்களா, கட்டுரைதான் எழுதுவார்களா!

சரி, அது கிடக்கட்டும். சக்கரக் கம்பிகளிடையே அகப்பட்ட என் வேஷ்டியை விடுவிப்பதற்கு நான் அன்று பட்ட பாட்டை என்னவென்று சொல்வேன்! முதல் தடவை அப்படி நடந்தபோது சைக்கிளை நிறுத்தி அதைப் பின் பக்கமாகப் போகச் செய்து, அதனுடன் நானும் பின் பக்கமாக நடந்தேன். உருவக்கூடிய ஸ்தானம் வந்ததும் சைக்கிள் சீட்டின்மேல் அகராதியை வைத்து, வேஷ்டியை உருவி, அதில் படிந்த கறைகளைப் பார்த்து முகத்தைச் சுளித்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு புறப்பட்டேன். கொஞ்ச தூரம் வந்ததும் கையில் அகராதி இல்லை என்று தெரிந்தது. சைக்கிளைப் பின்னோடச் செய்த இடத்துக்கு வந்து, தரையைப் பார்த்தேன். அங்கே அகராதி இல்லையென்று கண்டதும் அதைத் திருடியவனை மனசார ஏசினேன். கடைசியில் வேறெங்கும் விழாமல் சீட்டின் மேலேயே வீற்றிருந்த அகராதியைப் பார்த்ததும், அதனிடம் என் ஏச்சையெல்லாம் 'வாபஸ்' வாங்கிக் கொண்டேன்.



இரண்டாவது தடவை வேஷ்டியை விடுவிக்கையில் அப்போது அங்கு வந்த மிஸ்டர் தாமோதரம், "ஸார் என்ன, சர்க்கஸ் வித்தை பழகுகிறாப் போல இருக்கு!" என்றார். அவரிடம் விஷயத்தைச் சொன்னேன்.

"வேஷ்டியைத் தூக்கிக் கொண்டு 'ரைடு' பண்ணுங்கோ!" என்றார்.

"ரைடு பண்ண முன் சக்கரம் அனுமதிக்க வில்லையே!" என்றேன்.

"சைக்கிள் ஷாப்பிலே போய் 'இன்பிளேட்' பண்ணிக்கிட்டுப் போங்கோ!" என்றார்.

"அதற்காகத்தான் போகிறேன்!" என்றேன்.

"இந்தப் புஸ்தகத்தை ஏன் இப்படிச் சுமந்து தொலைக்கிறீர்கள்! வீட்டிலே வைத்துவிட்டு வரப்படாதோ?......ஓ...... ஸ்டாண்டு இல்லையா, ஸ்டாண்டுக்குப் பதிலாக இதை அண்டை கொடுக்கலாமென்று யோசனையா? பேஷ்! 'காப்பிட்டல் ஐடியா' ஸார்!" என்றார் அவர்.

சாதாரண 'ஐடியா'க்களையே ஊர் முழுவதும் ஒலி பரப்பிவிடும் இந்த மனுஷன், இந்தக் 'காப்பிட்டல் ஐடியா'வை வைத்துக் கொண்டு என் பேரை விதவிதமான 'மீட்டர்'களில் ஒலி பரப்பி விடுவானே என்று மனம் புழுங்கிக் கொண்டு போகையில், எதிரே மிஸ்டர் சற்குணம் வந்தாராம்! 'வந்தாராம்' என்று ஏன் சொல்லுகிறேனென்றால், அவர் வந்ததை நான் பார்க்கவில்லை; அவர் என்னை நமஸ்கரித்ததையும் நான் பார்க்கவில்லை. பார்த்திருந்தாலும் பதில் நமஸ்காரம் போடக்கூடிய நிலையிலா நான் அப்போது இருந்தேன்? கடவுளே வந்து என்னை வணங்கிப் பதில் வணக்கம் போடு என்று சொன்னால்கூட, முதலில் என்னை இந்த ஆபத்திலிருந்து விடுவித்தால் தான் பதில் வணக்கம் செய்ய முடியும் என்று சொல்லக்கூடிய சந்தர்ப்பத்தில்

நான் இருந்தபோது, கேவலம் ஒரு மனுஷனை நமஸ்கரிக்க என் சைக்கிளையும் அகராதியையும் நான் விட்டுவிட முடியுமா?

“இப்போதெல்லாம் ஸார்வாளுக்குக் கண் தெரியுமா? ‘எலக்ட்ரிக் லைட்’ போட்ட வீட்டுக்குக் குடியேறியாச்சு. நம்மைப்போல் பத்து ரூபாய் வாடகை கொடுக்கிறவனைக் கவனிப்பாரா!” என்று முனகிக் கொண்டே மனுஷன் ஒழிந்தார்!

“மனுஷனுடைய மன நிலையை அறியாமல் அவன் செய்கைகளைத் தப்பர்த்தம் பண்ணுகிற சற்குண வர்க்கம் அடியோடு ஒழிக!” என்று நான் சபித்தேன். அவ்வளவுதான்; “நீ இட்ட சாபத்திற்கு இரட்டை ஆமோதிப்பு!” என்று சொல்வனபோல், என் சைக்கிளும் அகராதியும் தடாலென்று நடுத் தெருவில் விழுந்து விட்டன.

சமய சகாயனாக மிஸ்டர் தேவசகாயம் அச்சமயம் அங்கு வந்து சேர்ந்தார். அவர் என் அகராதியை எடுக்க, நான் சைக்கிளைத் தூக்கினேன்.

“வாருங்கள், ஸார்! ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம” என்று பக்கத்திலிருந்த தன் வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்றார் தேவசகாயம்.

தேவசகாயத்தைப்போன்றவர்கள் தெருவுக்கு ஒருவராக இருந்தால், இரண்டு சக்கரங்களிலும் காற்றில்லாத சைக்கிளை உருட்டிக் கொண்டு, இரண்டு தமிழகராதிகளைக்கூடத் தூக்கிச் செல்லலாம் என்று என் மனதில் பட்டது.

சிறிது நேரத்துக் கெல்லாம் காப்பி சுடச்சுட வந்தது. அதைச் சாப்பிட்ட பிறகு, அகராதியை அவரிடமே கொடுத்துவிட்டுப் போய்விடலாமா என்று எனக்குத் தோன்றிற்று. அதற்கேற்றாற்போல் அவரும், “ஸார், அருமையான ‘பயிண்டு’ ஸார்! வேலாயுதம் ‘பிரஸ்’ வேலைதானே? அவனுடைய வேலையே வேலை! நானும் இதே மாதிரி இரண்டு புத்தகங்களை ‘பயிண்டு’ பண்ணி வைத்திருக்கிறேன். சார்ஜுதான் புத்தகம் ஒன்றுக்கு மூன்று ரூபாய் வாங்கி விட்டான். காட்டுகிறேன், பாருங்கள்!” என்று சொல்லி அலமாரியைத் திறந்து இரண்டு புத்தகங்களை எடுத்து என்னிடம் கொடுத்தார். ஒன்று பைபிள்; மற்றொன்று யுனிவர்ஸிட்டி காலண்டர்.

என்னுடைய அகராதியையும் தன்னுடைய புத்தகங்களையும் மேஜைமேல் வைத்தும் கையில் எடுத்தும் அவர் அழகு பார்த்தார். “இப்படிப்பட்ட புத்தகங்களைத் தூக்கிக் கொண்டு போவதிலேயே ஒரு பெருமை இருக்கு, ஸார்!” என்றார்.

நானும் “வாஸ்தவம்” என்று சொல்லிவிட்டு ஒரு பெருமூச்சு விட்டேன். பிறகு, கொஞ்ச நேரம் அவருடன் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். சைக்கிள் கடையில் சைக்கிளுக்குக் காற்றடித்தேன். பிறகு, அதன்மேல் ஏறினபின் என்னுடைய அகராதி பிரயாணத்தின் இரண்டாம் பாகம் ஆரம்பமாயிற்று.

என்ன ஆச்சரியம்! இப்பொழுது அகராதியின் பளு குறைந்து விட்டதுபோல் எனக்குத் தோன்றிற்று. எல்லாம் மிஸ்டர் தேவசகாயத்தின் காப்பி செய்த வேலை! சிறிது தூரம் சென்றதும், என் சைக்கிளைத் தாக்க வருபவர்போல ஒருவர் எதிரே விரைந்து வந்தார். ஆகவே, சைக்கிளைச் சற்றுத் திருப்ப வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தது. இடக்கையிலிருந்த அகராதியை சைக்கிள் பிடிமேல் வைத்துப் பிடித்துக் கொண்டு கைப்பிடியை அழுத்தித் திருப்பினேன். எதிரே வந்தவருக்கு என் சைக்கிளின் மேல் என்ன மோகமோ? என் சைக்கிளை அணைக்க அவருக்கு நான் இடம் கொடுக்கவில்லை என்றாலும், தன் அங்கவஸ்திரத்தின் ஒரு முனையை என் சைக்கிள் கைப்பிடிமேல் சுற்றிவிட்டார். “ஸார், ஸார்! துண்டு, துண்டு!” என்று அவர் கதறியதைக் கேட்டு நான் திரும்பினேன். சைக்கிளுக்குப் புத்தியிருந்தால் அதுவும் என்னுடன் சேர்ந்து திரும்பியிருக்கும். அதுதான் இல்லையே! அதற்குப் பதிலாக ரஸ்தா ஓரத்தில் நின்று கொண்



டிருந்த தண்ணீர் வண்டியின்மேல் மோதி விட்டது. நான் விழுந்தேன்; புத்தகமும் விழுந்தது; சைக்கிளும் விழுந்தது!

எங்கிருந்தோ இரண்டு பேர் எனக்கு உதவி செய்ய வந்தார்கள். அவர்களில் ஒருவர், "ஸார்வாள் புதுசாப் பழகுகிறாப் போலிருக்கு!" என்றார்.

என்னுடைய பதினைந்தாவது வயது முதல் முப்பத்திரண்டாவது வயதுவரை நான் சைக்கிள் ஓட்டிக் கொண்டிருக்கிறேன். என்னைப் பார்த்துப் புதுசாப் பழகுகிறார் என்று வசை சொன்னால் என் மனம் எப்படியிருக்கும்?

புண்பட்ட நெஞ்சுடன் மறுபடியும் அகராதி சகிதம் சைக்கிளில் ஏறினேன். திடீரென்று ஒரு காட்சி. எனக்கு முன்னால் சற்றுத் தூரத்தில் என் அகராதியளவு பருமனுள்ள ஐந்து அல்லது ஆறு புத்தகங்களைச் சுமந்தவராய்த் தள்ளாடிக் கொண்டு ஒருவர் போய்க் கொண்டிருந்தார். ஆஹா! என்னைவிட ஐந்து மடங்கு அதிகக் கஷ்டத்திற்குள்ளாகித் திணறிக் கொண்டிருந்த அந்த மனுஷனைக் கண்டதும் என் மனம் எவ்வளவு குதூகலமடைந்தது!

எனக்குண்டான குதூகலத்தில் எனக்கும் அவருக்கும் இடையே இருந்த தூரம் உடனே குறைந்து விட்டதைக்கூட நான் கவனிக்கவில்லை. அவர்மேல் மோதி அவரையும் அவருடைய புஸ்தகங்களையும் கீழே தள்ளி நானும் விழுந்தேன். மனுஷன் நல்ல மனுஷர்! "வெரி ஸாரி, ஸார்!" என்றார் தரையில் கிடந்தவாறே.

"வெரி வெரி ஸாரி, ஸார்!" என்றேன் நான் எழுந்துகொண்டு.

சிதறிக் கிடந்த புத்தகங்களை நான் பொறுக்க ஆரம்பித்தேன். அவர் என் சைக்கிளைத் தூக்கினார். "அடி பட்டதா, ஸார்?" என்று கேட்டேன். "உங்கள் சைக்கிளுக்கு ஏதாவது ரிப்பேரா என்று பாருங்கள்!" என்றார் அவர்.

பிறகு, பக்கத்துக் காப்பிக் கடைச் சுவரில் என் சைக்கிளைச் சாத்திவிட்டு, என்னிடமிருந்த புத்தகத்தையும் வாங்கிக் கொண்டு அவர் என்னை ஹோட்டலுக்குள் அழைத்துச் சென்றார். இரண்டு கப் காப்பிக்கு ஆர்டர் பண்ணினார். எனக்கு உடனே ஒரு சந்தேகம் உண்டாகி விட்டது. "உங்கள் பெயரும் தேவ சகாயமோ?" என்று கேட்டேன்!

"ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? என் பெயர் அழகர்சாமி!" என்றார் அவர்.



"அது என்ன புஸ்தகங்கள்?" என்று கேட்டேன்.

"'அழுமூஞ்சி' பைபிண்டு வால்யூம்கள், ஸார்!" என்றார்.

"அது என்ன, அழுமூஞ்சி?" என்றேன்.

"அது ஒரு பத்திரிகை!" என்றார்.

அதற்குள் காப்பியும் வந்தது. அதைச் சாப்பிட்டு முடித்ததும், அவருக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு புத்தகத்துடன் கிளம்பினேன். அதற்குப் பிறகு, வேறு எவ்வித விபத்துக்கும் ஆளாகாமல் ஸ்ரீமான் கருணாநிதி வீடு போய்ச் சேர்ந்தேன். அவர் என் கையில் புத்தகத்தைக் கண்டதும், "தமிழகராதியா, ஸார்? ஏன் ஸார் இவ்வளவு அவசரம்? சௌகரியமானபோது கொண்டு வரப்படாதா? ரொம்ப தாங்ஸ்!" என்று சொல்லிப் புத்தகத்தை வாங்கிக்கொண்டு உள்ளே போனவர், உடனே திரும்பி வந்து "ஸார்!" என்றார்.

"என்ன ஸார்?" என்றேன்.

"இது தமிழகராதியில்லையே! 'அழுமூஞ்சி' பயிண்டு வால்யூம், ஸார்!" என்றார்.

எனக்குப் பகீரென்றது. "எக்ஸ்க்யூஸ் மி ஸார்!" என்று புத்தகத்தைத் திருப்பி வாங்கிக் கொண்டு சைக்கிளில் பறந்தேன். மத்தியானம் பன்னிரண்டு மணி வரை அழகர்சாமியைத் தேடி அலுத்துப்போன சமயத்தில், மிஸ்டர் தேவசகாயம் எதிரே வந்தார். அவர் என்னைக் கண்டதும், "என்ன, ஸார்வாள்! உங்கள் 'டிக்ஷனரி'யை என் வீட்டில் வைத்துவிட்டு அதற்குப் பதிலாக என்னுடைய பைபிளைக் கொண்டு போய் விட்டீர்களே!" என்றார்!

எப்படியிருக்கும், எனக்கு!



# காலக்ஷேபம்





### அப்படியா விஷயம்?

ஒரு பெரிய மனிதர் நந்தவனத்தில் உலாவப் போனார். அங்கிருந்த சோபாவில் சற்று உட்காரலாம் என்று நினைத்து அவர் சோபாவை நெருங்கும் சமயத்தில், இன்னொருவர் அதே சோபாவை நோக்கி வேகமாக வருவதைப் பார்த்தார். அவருக்கு முன்னால் போய் உட்கார விரும்பிய பெரிய மனிதர் இன்னும் வேகமாக நடந்தார். அதற்குள் பின்னால் வரும் ஆசாமி ஓட்டமும் நடையுமாக வந்து, "ஸார், ஸார்!" என்று கூப்பிட்டுக் கொண்டே கைதட்டினார். அதற்குள் பெரிய மனிதர் சோபாவில் உட்கார்ந்து விட்டார்.

பின்னால் வந்தவர் சாவதானமாகச் சிரித்துக் கொண்டே, "உட்காருங்கள்; அதனால் ஒன்றும் பாதகமில்லை. ஆனால் நான் இன்னொரு தடவை அந்தச் சோபாவுக்கு வர்ணம் பூசமாட்டேன், அவ்வளவு தான்!" என்றார்.

★

### மறுக்க முடியுமா?

ஒரு பிரசங்கி ஆவேசத்துடன் பேசிக் கொண்டே போனார்; தலைவர் மிகவும் சிரமத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார். பிரசங்கியோ தம் பிரசங்கத்தை முடிக்கிற வழியாயில்லை. முக்கால் மணி நேரம் பேசித் தீர்த்தார்.

தலைவர்:—என்ன, முடித்து விட்டீரா?

பிரசங்கி (மிடுக்குடன்):—ஆம், நீங்கள் நான் பேசிய விஷயத்தைத் துளிகூட எதிர்த்துப் பேச முடியாது, இது நிச்சயம்!

தலைவர் (சிரித்துக் கொண்டே):—நான் உம்மை எதற்காக எதிர்க்க வேண்டும்? நீர் பேசிய பேச்சு முழுவதும் ஜமீன்தாரி மசோதா எதிர்ப்புப் பற்றியது. அது சம்பந்தமான கூட்டம் இந்தக் கட்டிடத்தின் மூன்றாவது மாடியில் நடக்கிறது. இந்தக் கூட்டம் முதியோர் கல்விச் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்துக்காகக் கூடியிருக்கிறது. நீர் தவறிப் போய் .........

அவ்வளவுதான்; அந்த அதிகப் பிரசங்கியின் தலை கவிழ்ந்தது!

### பையன் கவனம்!

உபாத்தியாயர் பையன்களுக்குப் புரியாத ஒரு கடினமான கணக்கைப் போட்ட போது, ராமன் மிகவும் ஆழ்ந்த கவனத்துடன் அவரையே கவனித்துக் கொண்டிருந்தான்.

உபாத்தியாயர்:—ராமா, நீ ஒருவன்தான் நான் கணக்குப் போட்டதை நன்றாகக் கவனித்துக் கொண்டிருந்தாய். உனக்குப் புரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். என்ன கவனித்தாய், சொல்லு!

ராமன்:—உங்கள் மூக்கில் சிவப்பு மை ஒட்டிக்கொண்டிருக்கிறது, ஸார்!

★

### அவன் என்ன செய்வான்!

தகப்பனார்:—ஏண்டா, முத்து! அடுத்த வீட்டுச் சோமு இருக்கிறானே, அவன் புஸ்தகத்தைக் கீழே வைக்கிறானா, பார்த்தாயா? நீயும் இருக்கிறாயே, முட்டாள்!

முத்து:—அதற்கு நான் என்ன அப்பா செய்யட்டும்? சோமுவின் அப்பா பணக்காரர். அவனுக்கு மேஜை, நாற்காலி, பீரோ எல்லாம் வாங்கித் தந்திருக்கிறார். அவன் எதற்காகப் புஸ்தகத்தைக் கீழே வைக்கப் போகிறான்?

★

### முடியாது!

டாக்டர்:—உனக்கு வந்திருக்கும் வியாதிக்கு மருந்து சாப்பிட்டால் மட்டும் போதாது; உன் வியாதியைப் பற்றி நினைப்பதையே மறந்து, நீ உன் வேலையில் முழுகிவிட வேண்டும். அப்போதுதான் வியாதி குணமாகும்.



நோயாளி:—ஐயையோ, என்ன இருந்தாலும் என் வேலையில் நான் முழுகிவிட முடியாது, ஸார்! சிமிட்டி குழைப்பது அல்லவா என் வேலை?




### நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

## மன்னித்து விடுங்கள்!

**ப**த்மாவைப் பற்றி விசாரித்துக் கொண்டு வருமாறு ஜோஹ்ராவிடம் சொன்னபிறகு, ரமாநாத்துக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. சில சமயம் அவனுக்கு அளவு கடந்த ஏமாற்றம் உண்டாகும். சில சமயம் நம்பிக்கையும் தோன்றும். அவனுடைய மனதில் பற்பல சிந்தனைகள் தோன்றின.

ஜோஹ்ரா போயிருப்பாளா? கட்டாயம் போய்ப் பார்ப்பதாகத்தான் சொன்னாள். ஆனால் பார்க்கவேண்டும் என்கிற அவசியம் அவளுக்கென்ன? 'போனேன், பார்க்க முடியவில்லை' என்று திரும்பி வந்து சொன்னாலும் சொல்லி விடுவாள். ஒரு வேளை அவள் ஏமாற்றிவிட்டால்.........? நாம் சொன்னதை யெல்லாம் டிபுடியிடம் போய்ச் சொல்லி விட்டால்......? ஒரு பாவமும் அறியாத, பத்மா அல்லவா அவதிக்குள்ளாக நேரும்! நாம் முன்யோசனையின்றி அவளிடம் என்னத்தை யெல்லாமோ சொல்லி விட்டோமே! ...... ஆமாம், ஜோஹ்ரா அப்படி யெல்லாம் மோசமாக நடந்து கொள்ளுவாளா? மாட்டாள் என்றுதான் தோன்றுகிறது. நம்பின நம்மை அவள் மோசம் செய்து விடுவது என்று தீர்மானித்து விட்டால், அப்புறம் நாம் உயிருடன் இருப்பதும் ஒன்றுதான்; சாவதும் ஒன்றுதான். சேசே! அவள் அப்படி யெல்லாம் செய்யக்கூடியவளே அல்ல.

அதற்கடுத்தாற்போல, அவனுக்கு பத்மாவுடன் தான் நடத்திய வாழ்க்கை நினைவுக்கு வந்தது. அந்தக் காலத்தில் அவன் ஆபீஸிலிருந்து வரவேண்டியதுதான் தாமதம், பத்மா அவனுடைய சட்டைப் பையைச் சோதனை போட்டு, இருக்கும் காசை யெல்லாம் பிடுங்கிக் கொள்வாள். அதே பத்மா இன்று உண்மைக்கு உறைவிடமாக அல்லவா ஆகி விட்டாள். அன்று காதலுக்குப் பாத்திரமா யிருந்தவள் இன்று அவனுடைய உபாஸனைக்கு உகந்தவளாக அல்லவா ஆகி விட்டாள்!

“பத்மா! நான் உனக்குத் தகுந்தவனே அல்ல. உனக்கோ என்னை உச்சாணிக் கிளையில் ஏற்றி வைக்கவேண்டும் என்ற ஆசை; ஆனால் எனக்கோ அதற்குச் சக்தி யில்லை. அவ்வளவு உயரத்தில் என்னை ஏற்றி உட்கார வைத்தால் நான் தலை சுழன்று கீழேதான் விழுவேன். உன் உயர்ந்த நோக்கத்துக்கு நான் என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறேன். நீ என்னை உன் உள்ளத்திலிருந்து அகற்றி விட்டாய்; நான் இருப்பதையும் இறப்பதையும் ஒன்றாகவே கருதுகிறாய்; என்னை நீ அறவே வெறுத்துவிட்டாய் என்பதை நான் நன்கு அறிவேன். இருக்

நாலும் சொல்லுகிறேன். நான் பெருங் கஷ்டத்தில் அகப்பட்டுக்கொண் டிருக்கிறேன் என்பதாகவோ அல்லது நான் இறந்து விட்டேன் என்பதாகவோ உனக்குச் செய்தி கிடைக்குமானால் உன் கண்களில் கட்டாயம் நீர் சுரக்கும். ஒரு வேளை நீ என் பிணத்தையே பார்க்க வந்தாலும் வருவாய். ஆனால் ஐயோ! இந்தப் பாவி உயிர் போய்த் தொலைய மாட்டேன் என்கிறதே! உன் கண்முன் நீசனாக உயிர் வாழ்வதைக் காட்டிலும் சாவது எவ்வளவோ சிறந்த தல்லவா!''

அப்பொழுதே பத்மா முட்டிக் கொண்டாளே, ''வாக்கு மூலத்தை மாற்றிக் கொள்ளுங்கள், மாற்றிக் கொள்ளுங்கள்'' என்று! ரமாநாத் கேட்டானா? கேட்டிருந்தால் இந்தக் கேவலமான கதிக்கு ஆளாக நேர்ந்திராதல்லவா! அதுமட்டும் அல்ல; எப்பேர்ப்பட்ட கஷ்டத்தையும் பத்மாவுடன் கூடப் பங்கிட்டுக்கொண்டு அவன் எதிர்த்துப் போராடியிருக்கலாம். அவளுடைய சொத்தையும் அன்பையும் கவசமாகப் பூண்டிருந்தால் அவனுக்கு வாழ்வில் ஒருவேளை வெற்றியே கிடைத்திருக்கலாம்.

ஆனால் இப்பொழுதுதான் அவனுக்குப் பத்மாவைப் பிரிந்திருக்க முடியாது என்பது புலப்பட்டது. அத்துடன் கூட, ஜோஹிராவை உதறித் தள்ளிவிடுவதும் சிரமசாத்தியம் என்று பட்டது. ஆனால் அவனால் இரு பெண்மணிகளையும் திருப்தி செய்து போஷிக்க முடியுமா? இம் மாதிரி நிலைமையில் பத்மா அவனுடன் சேர்ந்து வாழச் சம்மதிப்பாளா? ஒரு நாளும் மாட்டாள். தனக்காகத்தான் அவன் இவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களையும் அநுபவித்தான் என்பது அவளுக்குத் தெரிந்துவிட்டாலும், அவள் மனம் ஒப்பமாட்டாள்; அவனை மன்னிக்கவும் மாட்டாள். ''எனக்காக நீங்கள் ஏன் உங்கள் ஆத்மாவைக் களங்கப்படுத்திக் கொண்டீர்கள்? எனக்கு என்னைக் காத்துக்கொள்ளத் தெரியாதா?'' என்றுதான் சொல்வாள்!

ரமாநாத் பகல் முழுவதும் மனப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தான். அவன் கண்கள் தெருவைப் பார்த்த வண்ணம் இருந்தன. குளிக்கும் நேரம் ஆயிற்று. சாப்பாட்டு நேரமும் சென்றது. அவன் எதையும் பொருட்படுத்தவில்லை. மனதை மாற்ற எண்ணி அவன் பத்திரிகை, நாவல் முதலியவைகளை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். ஆனால் எதிலாவது அவன் மனம் ஈடுபட்டால்தானே!

இரவு மணி பத்து அடித்தது. அப்பொழுதும் ஜோஹிராவைக் காணோம். வாசற் கதவும் சாத்தியாகிவிட்டது. இனிமேல் ஜோஹிரா வருவாள் என்ற நம்பிக்கை அவனுக்கில்லை. இருந்தாலும் காதுகளை மட்டும் பாம்புச் செவிபோலத் தீட்டி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். 'ஜோஹிரா வராத காரணம் என்னவாயிருக்கலாம்?' என்ற சிந்தனையில் லயித்த அவனை இரண்டொரு தடவை தூக்கம் ஆடி விழச் செய்தது. அதற்குள் பொழுதும் விடிந்து விட்டது.

இம்மாதிரி ஒரு வாரம் ஓடிவிட்டது. ஆனால் ஜோஹிரா வரவேயில்லை. அவள் வருவாள் என்ற நம்பிக்கையும் அவனுக்குச் சிறிது சிறிதாகக் குறைந்துவிட்டது.

''என்ன இருந்தாலும் அவள் சாதியில் வேசிதானே? தன் சாதிக் குணத்தைக்



காட்டாமல் இருப்பாளா? அவனை நம்பின நம்முடைய புத்தியைத்தான் நொந்து கொள்ள வேண்டும். ஒருவேளை போலீஸ் அதிகாரிகள் அவன் ஒருவனை நிறுத்தி யிருப்பார்களோ! அசட்டுத்தனமாக அவன் மேல் பொய்ப் பழியைச் சுமத்திவிடுமே! அப்படி யிருந்தால் அவன் எனக்கு ஒரு கடிதமாவது எழுதி யிருக்கலாமே! நாம் ஏமாந்துதான் போய்விட்டோம். அவளிடம் போய் நம் மனதில் உள்ளதை யெல்லாம் சொன்னோமே, அவள் போலீஸ் அதிகாரிகளிடம் சொல்லி விட்டால் நாம் இன்னும் கஷ்டத்துக்குள்ளாக நேருமே!"

ஜோஹிரா அப்படியெல்லாம் மோசமாக நடந்து கொள்ளக் கூடியவளல்ல என்று ரமாகாந்தின் அந்தராத்மா சொல்லிற்று.

ஆரம்பத்தில் நான்கைந்து நாட்கள் ஜோஹிரா அவனை மயக்கித் தன் வலையில் போட்டுக்கொள்ள முயன்றாள் என்பது என்னவோ உண்மைதான். ஆனால் போகப் போக அவளுடைய எண்ணம் மாறிவிட்டது. இல்லாவிட்டால் அடிக்கடி அவள் கண்கள் கலங்க, "என்னை மறந்துவிட மாட்டீர்களே?" என்று கேட்பாளா? அவளுடைய அந்த அன்புமொழிகளை நினைத்து அடிக்கடி அவன் தனிமையில் உட்கார்ந்து கொண்டு குழந்தைகளைப்போல அழுது வந்தான்.



இரவு எட்டு மணி இருக்கும். ஸப் இன்ஸ்பெக்டர் வந்து, "ஒரு நல்ல படம் வந்திருக்கிறது. வாருங்கள், போய்ப் பார்க்கலாம்" என்று கூப்பிட்டார். ரமாகாந் 'சரி' என்று சம்மதித்து 'டிரஸ்' செய்து கொள்ளுவதற்காகத் தன் அறைக்குச் சென்றான்.

அவன் உடை உடுத்திக் கொண்டிருந்த பொழுது, ஜோஹிரா உள்ளே நுழைந்தாள். ரமாகாந் ஒரு முறை அவளைத் திரும்பிப் பார்த்தான். பிறகு நிலைக் கண்ணாடிப் பக்கம் திரும்பித் தன் தலையை வாரிக் கொள்ளத் தொடங்கினான். அவளுடன் அவன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

ஜோஹிரா அன்று வழக்கம்போல் பகட்டான உடைகள் உடுத்திக் கொண்டும் நகை-நட்டு அணிந்து தளுக்கி மினுக்கிக் கொண்டும் வரவில்லை. சர்வ சாதாரணமான ஒரு வெள்ளைப் புடவை அணிந்து, நகை-நட்டு எதுவுமே யில்லாமல் வந்திருந்தாள். அதைக் காண அவனுக்கு வியப்பாகத்தான் இருந்தது. அன்று அவளுடைய முகத்தில் மோகனப் புன்னகை, குறு குறுப்பு இவைகளுக்குப் பதிலாகக் காம்பீர்யம் ஒளி வீசிக் கொண்டிருந்தது.

ஜோஹிரா ஒரு நிமிஷம் பேசாமல் நின்று பார்த்தாள். அப்பொழுதும் ரமாகாந் பேசாமல் இருக்கவே, அவள் அவனருகே சென்று, "என்மீது கோபமா? நான் என்ன குற்றம் செய்துவிட்டேன்? எதற்காக என்னிடம் பேசமாட்டேன் என்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

ரமாகாந் அதற்கும் பேசவில்லை. பூட்ஸைக் கால்களில் மாட்டிக் கொள்ளலானான். ஜோஹிரா அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, "உங்கள் கோபத்துக்குக் காரணம் எனக்குத் தெரியும். நான் இத்தனை நாட்கள் இங்கே வராமல் இருந்து விட்டேன் என்பதுதானே?" என்றாள்.

"நீ வரவில்லை என்றால் நான் உன்னை என்ன செய்துவிட முடியும்? வருவது, வாராதது உன் இஷ்டத்தைப் பொறுத்தது

"தானே?" என்று ரமாகாந்த் வெகு அலட்சியமாகப் பதில் சொன்னான்.



ஆனால் அடுத்த கணமே அவனுக்கு 'நாம் இப்படிப் பேசுவது கொஞ்சங் கூட நியாயமில்லை' என்று பட்டது. ஆகவே அவன் வெட்கித் தலை குனிந்தான்.

ஜோஹிரா குறுநகை புரிந்து கொண்டே, "வேடிக்கையாக இருக்கிறதே, நீங்கள் சொல்லுவது? நீங்கள் தானே எனக்கு ஒரு வேலை கொடுத்தீர்கள்? அதை முடித்துக் கொண்டு வருவதற்குள் நீங்கள் இப்படிக் கோபித்துக் கொண்டால் நான் என்ன செய்யமுடியும்? நீங்கள் கொடுத்திருந்த காரியம் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் நடந்து விடக்கூடியதா? நீங்கள் வரம் வாங்கி வருவதற்காக அனுப்பினீர்களே அந்தத் தேவி, மேற்பார்வைக்குத் தான் மல்லிகைப் பூவாய் இருக்கிறாளே தவிர உள்ளுக்குள் வெகு அழுத்தம். அவளை வழிக்குக் கொண்டுவருவதற்குள் 'போதும், போதும்' என்றாகி விட்டது" என்றாள்.

ரமாகாந்த் குரலில் ஒருவித அசுவாரஸ்யம் தொனிக்க, "ஆமாம், இப்பொழுது அவள் எங்கே யிருக்கிறாள்? என்ன செய்கிறாள்?" என்று விசாரித்தான்.

"அக்குத்தண்டனை கிடைத்திருக்கிறதே அதே நிரேனின் வீட்டில்தான்! அவன் குடும்பத்துக்கு உதவியாக இருக்கிறாள். அவனுடைய குடும்பமோ பெரிது. கவனிக்க நாதியற்றுக் கஷ்டப்படுகிறது. பத்மா போய் நிதி திரட்டி அவர்களைக் கவனிக்க ஆரம்பித்த பிறகுதான் கொஞ்சம் சிரமம் தீர்ந்ததாம். அந்தக் குடும்பத்துக்கு உயிர் கொடுத்ததே அவள் தானாம்" என்றாள் ஜோஹிரா.

அதைக் கேட்டதும் ரமாகாந்தின் அசுவாரஸ்யம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. அவன் பூட்ஸை அப்படியே போட்டுவிட்டு, நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான். பிறகு, "நிற்கிறாயே! உட்காரு. அவளிடம் எப்படிப் போனாய்? அவள் இருக்கும் இடம் உனக்கு எப்படித் தெரிந்தது? நீ போய் வந்த விவரத்தை ஆதியிலிருந்து ஒன்று பாக்கி விடாமல் சொல்லு" என்று மிகவும் ஆவலுடன் கேட்டான்.

"முதலில் தேவியின் வீட்டுக்குப் போனேன். அவள் 'பத்மா நிரேனின் வீட்டில் இருக்கிறாள்' என்று சொல்லி விலாசமும் தந்தாள். உடனே புறப்பட்டு நிரேனின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்......"

"ஆமாம், போனதும் நீ அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டாயா? உன்னைப் பார்த்ததும் அவள் 'யார், என்ன?' என்று ஒன்றும் புரியாமல் திகைத்துப் போயிருப்பாளே!" என்றான் ரமாகாந்த்.

ஜோஹிரா புன்முறுவலுடன் சொல்ல ஆரம்பித்தாள்:

"நான் இந்த உருவத்தில் அவளிடம் போகவில்லை. தேவியினிடம் விலாசத்தைத் தெரிந்து கொண்டு நேரே என் வீட்டுக்குப் போனேன். காலேஜில் படிக்கும் பெண்ணைப் போல வேஷம் போட்டுக் கொண்டேன். பிறகுதான் அவளைப் பார்க்கப் புறப்பட்டேன். இருந்தாலும் நம் வேஷம் வெளிப்படாமல் இருக்க வேண்டுமே என்று பயமாகத்தான் இருந்தது. நான் நிரேனின் தாயாரிடம் போய், 'நான் இங்கே யுனிவர்ஸிடியில் படித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் குடும்பத்துக்கு நேர்ந்திருக்கும் கதியை நினைக்க நினைக்க என்னவோ செய்கிறது! அதனால் தான் நேரில் பார்த்து ஆறுதல் சொல்லி விட்டுப் போகலாம் என்று வந்தேன்' என்றேன். குழந்தைகளுக்காகக் கையோடு மிட்டாய்களும் வாங்கிக் கொண்டு போயிருந்தேன். அவர்களுடன் நான் பேசிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் பொழுதே பத்மா தண்ணீர்க் குடத்துடன் உள்ளே நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் நான் நிரேனின் அம்மாவைப் பார்த்து 'இவள் யார்?' என்று ஒன்றும் தெரியாதவள் போலக் கேட்டேன்.

"இவளா? இவளும் உன்னைப்போல எங்கள் கஷ்டத்துக்கு இரங்கி உதவி புரியத்தான் வந்திருக்கிறாள். இவளுடைய கணவர் இங்கே ஏதோ ஆபீஸில் வேலை பார்க்கிறாராம். இவள் தினம் பொழுது விடிந்ததும் இங்கே வந்து விடுகிறாள். இவ்வளவு நாளாக நான்தான் ஆற்று நீர் கொண்டு வந்து கொண்டிருந்தேன். இவள் இங்கே வந்தது முதல் என்னை 'அதெல்லாம்

செய்யக் கூடாது' என்று தடுத்து விட்டுத் தானே கொண்டு வருகிறான்; குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளுகிறான். இவன் சரியான சமயத்தில் வந்து உதவாவிட்டால் எங்கள் நிலைமை என்ன ஆகியிருக்குமோ? எங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததே இவன் தான் அம்மா!'' என்றாள் கிழவி.

அவர்கள் வீட்டுக்கு எதிர்த்தாற்போல ஒரு சின்னஞ் சிறு 'பார்க்கு' இருக்கிறது. தெருக் குழந்தைகள் எல்லாம் அங்கே போய்த்தான் விளையாடுகிறார்கள். வெய்யில் தாழ்ந்து விட்டது. பத்மாதேவி அந்த இரண்டு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு பார்க்குக்குப் புறப்பட்டாள். நானும் சிறிது நேரத்துக் கெல்லாம் கிழவியிடம் விடைபெற்றுக் கொண்டு பார்க்குக்குப் போய்ச் சேர்ந்தேன். குழந்தைகள் விளையாடப் போய் விட்டன. நான் பத்மாவை நெருங்கி அவளுடன் பேசுவதற்காக மெதுவாக வாய் கொடுத்தேன்'' என்றாள்.

ரமாநாத் நாற்காலியை இன்னும் இழுத்து அவளருகில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தவாறே, "ஆமாம், அவளிடம் எப்படிப் பேச்சை ஆரம்பித்தாய்?'' என்று கேட்டான்.

"அதுதான் சொல்லிக் கொண்டிருக்கிறேனே! அதற்குள் எதற்காக இவ்வளவு அவசரப்படுகிறீர்கள்?-'பத்மாதேவி, நீங்கள் இப்போது எங்கே யிருக்கிறீர்கள்? கிழவியும் மாட்டுப் பெண்ணும் உங்களைப் பற்றி வானளாவப் புகழுவதைக் கேட்டதும், உங்களைக் கண்டு பேச வேண்டும்; ஸிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசையாயிருந்தது அதனால்தான் உங்களிடம......' என்று நான் பேச்சை ஆரம்பித்தேன்.

பத்மா வியப்பும் வெட்கமும் ததும்பும் குரலில், "என்னையா? காலேஜில் படிக்கும் நீங்கள் எங்கே? படிப்பு வாசனையே இல்லாத சுத்தக் கர்நாடகமான நான் எங்கே? உண்மையாகத்தான் சொல்லுகிறீர்களா, அல்லது பரிகாசம் செய்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

"பரிகாசத்துக்கு நேரம் கிடையாதா? அதுவும் முதல் முதலாகப் பழகும்பொழுதே யாராவது பரிகாசமாகப் பேச ஆரம்பிப்பார்களா?'' என்று நான் கேட்டேன்.



பத்மா இன்னும் வெட்கிப்போய், "நீங்கள் என்னையும் ஒரு பொருட்டாக எண்ணிப் பேச வந்தது பற்றிப் பரம சந்தோஷம்'' என்றாள்.

"உங்கள் கணவர் உங்களுக்கு இவ்வளவு சுதந்திரம் அளித்திருப்பதைப் பார்த்தால், ரொம்ப முற்போக்கான மனிதராக இருப்பார் போலத் தோன்றுகிறது. எந்த ஆபீஸில் இருக்கிறார்?'' என்று கேட்டேன்.

பத்மா தன் கை நகங்களைப் பார்த்துக் கொண்டே "போலீஸில்'' என்று சொன்னாள்.

"போலீஸிலா? போலீஸில் இருந்து கொண்டு அவர் உங்களுக்கு இங்கே வந்து போக அனுமதி யளிக்கிறாரா?'' என்று நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

பத்மா அந்தக் கேள்வியை எதிர்பார்க்கவே யில்லை. ஆகவே அவள் சற்றுத் திகைத்துப் போய், "அவர் என்னிடம் ஒன்றும் சொல்லுவதில்லை......நான் அவரிடம் இந்த விஷயங்களைப் பற்றி ஒன்றுமே சொல்லுவதில்லை ......... அவர் வீட்டுக்கு அதிகமாக வருவதேயில்லை. பெரும்பாலும் ஆபீஸில்தான் இருப்பார்'' என்றாள்.

சேர்ந்தாற்போல மூன்று பதில்கள் அளித்த பிறகும்கூட, அவளுக்குத் தான் அளித்த பதில்கள் நம்பத் தகுந்தவைதானா, இல்லையா என்ற சந்தேகம் எழுந்தது. ஆகையால் அவள் என்னைப் பார்க்க விரும்பாமல் தன் முகத்தை வேறொரு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

"என் அம்மா! கொள்ளைக் கேஸில் கைதிகளுக்கு விரோதமாகச் சாட்சி சொல்லியிருக்கிறானே ஒருவன்! அவனை ஒரு தடவை பார்ப்பதற்கு நீங்கள் உங்கள் கணவர் மூலம் எனக்கு அனுமதி வாங்கித் தர முடியுமா?'' என்று கேட்டேன்.

ரமாநாத்தின் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. இதயம் 'படபட' வென்று வேகமாக அடித்துக் கொண்டது.

ஜோஹிரா மேலே சொல்லலானாள்: "இதைக் கேட்டதும் பத்மா என்னை ஒரு முறை விழுங்கி விடுபவள் போலப் பார்த்தாள். பிறகு

"நீங்கள் அவனைப் பார்த்து என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நான் அவனைப் பார்ப்பதற்கு உங்களால் வேண்டிய ஏற்பாடு செய்ய முடியுமா, முடியாதா? சொல்லுங்கள். 'குற்றமற்றவர்களைக் குற்றவாளிகளாக்கத் துணிந்தாயே, பாவி! அதனால் உனக்கு என்ன கிடைத்தது?' என்று நான் அவனைக் கேட்க விரும்புகிறேன். அதற்கு அவன் என்ன பதில் சொல்லுகிறான் என்று பார்க்க வேண்டும்" என்றேன்.

அதைக் கேட்டதும் பத்மாவின் முகம் பேய் அறைந்தது போலாகி விட்டது. "அவன் என்ன சொல்லுவான்? உலகத்தில் உள்ள எல்லோரையும் போலவே நானும் என் சுய நலனுக்காகச் செய்தேன் என்றுதான் சொல்லுவான். அதைக் கேட்டு என்ன பிரயோசனம்?" என்றாள் அவள்.

"சரி, உங்கள் கணவர் சர்க்கார் தரப்புச் சாட்சியாகி விடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று நான் கேட்டேன்.

பத்மா பயந்த பார்வையுடன் என்னைப் பார்த்தவாறு, "என்னிடம் இந்தக் கேள்வியைக் கேட்பானேன்? உங்கள் மனதையே கேட்டுப் பார்த்துக்கொள்ளுங்களேன்!" என்றாள்.

"நான் என்ன செய்வேன், தெரியுமா? அப்படிப்பட்டவருடன் பேசமாட்டேன்; அவருடைய முகத்தில்கூட விழிக்க மாட்டேன்" என்றேன் நான்.

பத்மா மிகவும் கவலையுடன், "நானும் அப்படித்தான் இருப்பேனோ, என்னவோ? எனக்கு இப்பொழுது சரியாக விளங்கவில்லை" என்றாள்.

இருட்ட ஆரம்பித்து விட்டது.

"எனக்கு நேரமாகிறது. குழந்தைகளைக் கொண்டுபோய் விட வேண்டும். முடிந்தால் நாளைக்கு வாருங்களேன், உங்களுடன் பேசப் பேச எனக்கு ரொம்ப ஆனந்தமாக இருக்கிறது" என்றாள் பத்மா.

நானும் எழுந்து அவளுடன் புறப்பட்டேன். சிறிது தூரம் சென்றதும் பத்மா மறுபடியும், "நாளைக்குக் கட்டாயம் வாருங்கள். நாளைக்கு உங்களை இதே இடத்தில் எதிர்பார்க்கிறேன்" என்றாள்.

ஆனால் இன்னும் பத்து அடிகள் செல்லுவதற்குள்ளேயே அவள் மறுபடியும் நின்று, "ஆமாம், உங்கள் பெயரைக் கேட்க மறந்தே போய் விட்டேனே!... உங்களுடன் பேசப்பேச இன்னும் பேசிக்கொண்டேயிருந்தால் தேவலை என்று தோன்றுகிறது. இன்னும் சற்று உட்காருங்களேன்; பேசிக்கொண்டிருப்போம்" என்றாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் மறுபடியும் நான் அவளுடன் இளைவின் வீட்டுக்குப் போனேன். கிளிக்கூண்டு போன்ற அந்தச் சின்னஞ் சிறு வீட்டில் அவர்கள் எல்லோரும் எப்படித்தான் குடியிருக்கிறார்களோ? சட்டியும் பானையும், பாயும் படுக்கையுமாக மூலைக்கு ஒன்று கிடந்தது. போதும் போதாக் குறைக்கு

## பதினைந்து நிமிஷத் தூக்கம்

காந்திஜி எந்தக் காரியத்தையும் குறிப்பிட்ட காலத்தில் செய்து முடிப்பார். ஐந்து மணிக்கு ஒரு கூட்டத்தில் பேசுவதாக ஒப்புக்கொண்டால், சரியாக ஐந்து மணிக்கே அங்கு போய்விடுவார். ஒரு நிமிஷங்கூடத் தாமதம் செய்யமாட்டார். சாப்பிடுவது, தூங்குவது முதல் ஒவ்வொரு காரியமும் மணிக்கணக்குப் பிரகாரம் நடக்கும்.

உதாரணமாக, அவர் தினமும் பிற்பகலில் பதினைந்து நிமிஷங்கள் தூங்குவது வழக்கம். படுத்துக்கொண்ட பதினைந்தாவது நிமிஷம் எழுந்து விடுவார். யாரும் எதுவும் அவருடைய தூக்கத்தைக் கலைக்க முடியாது.

ஒரு முறை காந்திஜியும் வேறு சில தலைவர்களும் மோட்டார் வண்டியில் வந்துகொண்டிருந்த போது, மோட்டார் ஒரு மரத்தின் மோதிக் குப்புறக் கவிழ்ந்து விட்டது. மோட்டாரில் இருந்தவர்கள் எல்லோரும் எழுந்து போய்க் காந்திஜிக்கு என்ன நேர்ந்து விட்டதோ என்று பரபரப்பாகப் பார்த்தார்கள். அவர் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்! பதினைந்து நிமிஷம் தூங்கிய பிறகுதான் அவர் எழுந்தார்.

வீடெல்லாம் ஒரே ஈரமாகக் கிடந்தது. நாங்கள் போனபொழுது சமையலாகி விட்டது. தினேஷின் மனைவி பத்துப் பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். பத்மா அவளைக் கூப்பிட்டு, "நீ பாத்திரம் தேய்த்தது போதும். குழந்தைகளுக்குச் சாதம் போட்டுத் தூங்கப்பண்ணு" என்று அனுப்பி விட்டாள். பிறகு அவள் தானே உட்கார்ந்து பாத்திரம் பண்டங்களைத் தேய்க்க லானாள். அவளுடைய அந்தச் செயலைக் கண்டு நான் அப்படியே மெய்ம்மறந்து உட்கார்ந்து விட்டேன்; தேய்த்த பாத்திரங்களை எடுத்து அலம்பி வைக்கவும் ஆரம்பித்தேன். பத்மா 'வேண்டாம். வேண்டாம்' என்று எவ்வளவோ தடுத்தாள். ஆனால் நான் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் பாத்திரங்களை அலம்பிவைத்துக் கொண்டிருந்தேன்.

பத்மா உடனே தண்ணீர்த் தவலையைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டு, "நான் தண்ணீர் தர முடியாது. நீ எழுந்து அப்பால் போ. உன்னைப் போன்றவர்கள் இங்கே வருவதே பெரிய காரியம். பேசாமல் போய் உட்காரு. இந்த மாதிரிக் காரியங்கள் நீ உன் ஆயுளிலே செய்திருப்பாயா?" என்று ஸௌஜன்யத்துடன் சடித்துக் கொண்டாள்.

"நீ மட்டும் எங்கே செய்திருக்கப் போகிறாய்? நீ செய்யும்பொழுது நான் மட்டும் செய்யக்கூடாதோ?" என்றேன்.

அதற்கு அவள் "என் விஷயம் வேறு, உன் விஷயம் வேறு" என்றாள்.

"ஒன்றும் வேறில்லை. நானும் உன்னைப் போலத்தான். ஆமாம், ஒரு வேலைக்காரியை அமர்த்திவிடக் கூடாதோ?" என்று கேட்டேன் நான்.

"மாதம் எட்டு எட்டு ரூபாய் அவளுக்குப் படி அளக்கணுமே? அதற்கு எங்கே போகிறது?" என்றாள் அவள்.

"அந்த எட்டு ரூபாய் நான் தருகிறேன்" என்றேன் நான்.

பத்மா உண்மையான நன்றி ததும்பும் கண்களுடன் என்னை ஒரு முறை பார்த்தாள். அப்பப்பா! அந்தப் பார்வை! அதில் தான் என்ன பரிசுத்தம்! என்ன தெளிவு என்கிறீர்கள்! அவளுடைய அந்தத் தன்னலமற்ற ஊழியத்துக்கெதிரே, மானங்கெட்ட, வெறுக்கத் தகுந்த என் வாழ்வை எண்ணி நான் தலை குனிந்தேன். அந்தப் பாத்திரங்களை அலம்பி வைக்கும்பொழுது ஏற்பட்ட ஆனந்தம் உண்டே, அதைப்பற்றி என்ன சொல்லுவது? (தொடரும்)

## முன்னுக்குப் பின் — — முரண் பாடு

சில வருஷங்களுக்கு முன்பு காங்கிரஸ் மகா சபையின் விதிகளைத் திருத்தியமைப்பது சம்பந்தமாக அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் விவாதம் நடந்து கொண்டிருந்தது. அப்போது, திருத்தப்பட்ட புதிய காங்கிரஸ் விதிகளைப் பாராட்டி காந்திஜி பேசினார். இது ஸ்ரீ டி. பிரகாசத்துக்குப் பிடிக்கவில்லை.

"இந்த காந்திஜி எப்போதுமே இப்படித்தான்! இவருக்கு ஒரு உறுதியான கொள்கையே கிடையாது. முன்பு வட்டமேஜை மகாநாட்டுக்குப் போயிருந்தபோது, பழைய காங்கிரஸ் விதிகளை ரொம்பப் புகழ்ந்தார். அது ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதாகவெல்லாம் சொன்னார். இப்போது புதிய காங்கிரஸ் விதிகளைப் புகழ்ந்து, 'இதற்கு ஈடு இணையே உலகத்தில் இல்லை' என்கிறார். இப்படி முன்னுக்குப் பின் முரணாகப் பேசலாமா?" என்றார்.

காந்திஜி சிரித்துக் கொண்டே, "இது எப்படி முன்னுக்குப் பின் முரணாகும்? அப்போதிருந்த நிலைமையில் பழைய காங்கிரஸ் விதிகள் தேசத்துக்கு ஏற்றவையாக இருந்தன. இப்போதுள்ள நிலைமையில் புதிய காங்கிரஸ் விதிகள் சிலாக்கியமாக இருக்கின்றன. போன வருஷம் எனக்கு வயது எழுபது. இப்போது எழுபத்து ஒன்று. 'அதென்ன? போன வருஷம் இருந்ததைப் போலத்தானே இந்த வருஷமும் இருக்க வேண்டும். இது முன்னுக்குப் பின் முரண் இல்லையா?' என்று கேட்பதைப் போலத்தான் இருக்கிறது நீங்கள் சொல்லுவதும்!" என்றார்.

ஸ்ரீ பிரகாசம் வாயே திறக்கவில்லை.

# ஒரு குறை!

ராமு

சிவராமன் அப்போதுதான் கடையிலிருந்து திரும்பி வந்தான். கடியாரத்தைப் பார்த்தான். மணி எட்டே முக்கால். விரைவில் குளித்துச் சாப்பிட்டுவிட்டு ஆபீஸுக்குப் போக வேண்டும்.

"என்ன, வெந்நீர் தயாராக இருக்கிறதா?" என்று கேட்டான்.

"நன்றாக இருக்கிறது! ஒரு மணி நேரத்துக்கு முன்னாலேயே கொதித்து ஆவியாகப் போய்க் கொண்டிருக்கிறது. நீங்கள் இன்னும் 'வெந்நீர் தயாராக இருக்கிறதா?' என்று கேளுங்கள்!" என்ற பதில் சமையல் கட்டிலிருந்து வந்தது.

சிவராமன் சோப்புப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு குளிக்கப் போனான். அதற்குள், "சிவராமா!" என்ற குரல் வாசலில் கேட்கவும், அவன் திரும்பிப் பார்த்தான்; அவனுடைய நண்பன் கோபாலன் அங்கே நின்று கொண்டிருந்தான். "இதென்ன, இவன் இந்தச் சமயத்தில் வந்து தொலைந்திருக்கிறான்!" என்று மனதிற்குள்ளாக அவனைத் திட்டிக்கொண்ட போதிலும் வெளியே அதைக் காட்டிக்கொள்ளாமல், "என்னப்பா, சமாசாரம்! இந்நேரத்தில் வந்திருக்கிறாயே?" என்று கேட்டான். வழக்கம்போல அவன் கடன் கேட்க வந்துவிட்டானோ என்று சிவராமனுக்கு மனதிற்குள்ளாக நடுக்கம்.

"எல்லாம் உன் காரியமாகத்தான் வந்தேன்" என்றான் கோபாலன்.

"என்ன காரியம்?"

"நீ ஒரு சைக்கிள் வேண்டுமென்று கேட்டிருந்தாய் அல்லவா?"

இரண்டு வருஷத்துக்கு முன்னால் தனக்கு ஒரு சைக்கிள் வேண்டுமென்று கோபாலனிடம் சொன்னது அப்போதுதான் சிவராமனுக்கு ஞாபகம் வந்தது.

"ஆமாம், கிடைத்திருக்கிறதா?" என்று அவன் கோபாலனை ஆவலாகக் கேட்டான்.

"ஆம். நல்ல சைக்கிள்; விலை ரொம்பக் குறைவு — நாற்பத்தைந்து ரூபாய்!"

"அப்படியா?—எங்கே இருக்கிறது?"

"எங்கே இருந்தால் என்ன? சைக்கிள் தானே உனக்கு வேண்டும்?"

"ஆம், ஆம்" என்று சிரித்தான் சிவராமன்.

"ஆனால், உன்னிடத்தில் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும். சைக்கிள் நல்ல சைக்கிள்—ரொம்ப நல்ல சைக்கிள். ஆனால், அதற்கு ஒரே ஒரு குறை மாத்திரம் உண்டு."

"என்ன குறையாயிருந்தாலும் பரவாயில்லை, வாங்கிவிட வேண்டியதுதான்!"

"சரி, அப்படியானால் வா! — இப்போதே போய்ப் பார்த்து, விலையையும் பேசி முடித்து அதைக் கொண்டுவந்துவிடுவோம்."

"எனக்கு நேரம் இல்லையே! சாயந்திரம் போவோமே!"

"சாயந்திரமா? நன்றாக இருக்கிறது! சாயந்திரம்வரை அது இருக்குமா? வேறு யாருக்காவது அதை விற்றுவிடுவார்களோ என்னவோ? நல்ல பொருள் ஒன்று இருக்கிறது என்று சொன்னால், உடனே போய் அதை வாங்கத் தெரியவில்லையே!—இதற்குமேல் நான் என்ன செய்வது? சரி, நான் போகிறேன்."

"கொஞ்சம் பொறு, அவசரப்படுகிறாயே! நான் என்னத்துக்கு? நீயே பேசி முடித்துவிடு! பணத்தை வேண்டுமானாலும் இப்போதே கொடுத்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டுப் பெட்டியைத் திறந்து நாற்பத்தைந்து ரூபாயை எடுத்துக் கோபாலனிடம் கொடுத்தான்.

கோபாலன் சந்தோஷத்துடன் அதை வாங்கிக் கொண்டு "சரி, நான் வரட்டுமா?—சாயந்திரம் உன்னைப் பார்க்கிறேன்" என்றான்.

"ஆமாம், சாயந்திரம் பார்ப்போம். ஆனால், சாயந்திரம் நீ வரும்போது அந்தச் சைக்கிளில் வரவேண்டும் — என்ன?"

"அதுதான் முடியாது!" என்று நிதானமாகப் பதில் சொன்னான் கோபாலன்.

சிவராமன் திடுக்கிட்டுப்போய், "ஏன், ஏன்?" என்று கேட்டான்.



"அதற்குள் சைக்கிள் ஓடவேண்டும் என்று நினைத்தால் முடியுமா? சைக்கிள் ரொம்ப நல்ல சைக்கிள்தான். ஆனால், அதற்கு நான் சொன்னதுபோல ஒரே ஒரு குறை: இரண்டு சக்கரங்கள் மாத்திரம் இல்லை!" என்றான்.




# கம்பர் தரும் காட்சி

• • •

## 203. இதுவா வில் வித்தை!

ராமனுடைய உயர்ந்த குணமும், தியாக குணமும், வீரமும் வாலியின் உள்ளத்தில் ஆழமாய்ப் பதிந்து கிடந்தன. ராமனுடைய அம்பே வந்து மார்பில் பாய்ந்தும்கூடக் கொள்கை மாறவில்லை. ராமனை நேரில் கண்ட போது அவனிடத்தில் வாலிக்குப் பரிவு தான் இருந்தது என்பதைப் பார்த்தோம்.

இரத்தம் மிகுதியாய்ச் சிந்தவும், இயல்பான அடக்கத்தை மீறி ஒரு வெறி (ஜன்னிக் கோளாறு) பிறக்கிறது. அந்த வெறியிலிருந்து வார்த்தைகள் வேறு பாவத்தோடு வெளி வருகின்றன.

* * *

இப்போது கடுகடுப்புடனே வாலி பேசுகிறான்: "நீ செய்திருக்கிற காரியம் வீரச் செயல் அல்ல. தந்தை தாயார் விதித்த காரியமா? அல்ல. அது போகட்டும்; உன் தந்தை சத்தியத்துக்காக உயிரை விட்டானே, அந்தச் சத்தியத்தைச் சேர்ந்ததா இந்தப் பாழாய்ப் போன செயல்?"

வீரம் அன்று,வி
    தியன்று மெய்ம்மையின்
வாரம் அன்று,நின்
    மண்ணினுக்(கு) என்னுடல்
பாரம் அன்று,ப—
    கையன்று, பண்பொழிந்(து)
ஈரம் அன்றிது!—
    என்செய்த வாறுநீ!

[வாரம்: பகுதி: பண்பு ஒழிந்து: உனக்கு ஏற்பட்ட நற்குணத்துக்கு மாறும்; ஈரம் அன்று இது: ஒளிந்து நின்று பாணம் எய்யும் இந்த இரக்கமற்ற செயல்; என் செய்த வாறு நீ: என்ன செயலைச் செய்து தொலைத்தாயோ!

குறிப்பு:—பரிவு போய் ஆங்காரம் பிறந்து விட்டது — என்ற பாவம் 'நின் மண்ணினுக்கு என்னுடல் பாரம் அன்று' என்று பல்லைக் கடித்துச் சொல்லுகிறதில் கிடக்கிறது.]

ஆங்காரம் மேலிடுவதை இப்போது பார்க்கிறோம்.

"களங்கம் என்று சொல்லுகிற மறு ஒன்று வானத்தில் ஊர்கிற சந்திரனுக்கு இருக்கிறது என்பது நமக்குத் தெரியும்" என்று ஆரம்பிக்கிறான் வாலி.

கார்இ யன்றக—
    ளங்கம தாம்மறு,
ஊர்இ யன்றம—
    திக்குள தாம்எனச்,—
சூரி யன்மர—
    புக்கும்ஓர் சொல்மறு
ஆரி யன்பிறந்(து)
    ஆக்கிலை யாமரோ!

[கார் இயன்ற களங்கமதாம் மறு: கருநிறம் பொருந்திய களங்கம் என்று சொல்லும் மறு; ஊர் இயன்ற: வானத்தில் ஊர்தல் செய்கிற; மதிக்கு உளதாம் என: சந்திரனுக்கு இருப்பது போல; சூரியன் மரபுக்கும்: உன்னுடைய புகழ்பெற்ற சூரிய வம்சத்துக்கும்; ஓர் சொல் மறு: அழியாத பழியாகிய ஒரு மறுவை; ஆக்கிலையாம் அரோ: உண்டாக்கி விட்டாயே. அடடா! ஆரியன்: சீலம் படைத்தவன்.]

ராமனுடைய செய்கையால் உலகத்துக்கே கேடு வந்து விட்டது என்று எண்ணுகிறான் வாலி. "நீதி நூலின் தன்மையையும் உங்கள் குலத்தவரது

செங்கோலின் தன்மையையும் வீர வாழ்க்கையையும் நீ கவனித்தபாடாக இல்லை!" என்கிறான்.

நூல் இயற்கையும்
  நும்குலத்(து) உந்தையர்
கோல் இயற்கையும்
  கொற்றமும் போற்றலை!
வாலி யைப்படுத்
  தாய்அல்லை! மன்அற
வேலி யைப்படுத்
  தாய்விறல் வீரனே!

[கொற்றம்: வீரம்; வாலியைப் படுத்தாய் அல்லை: நீ தொலைத்தது வாலியை அல்ல; மன் அற வேலியைப் படுத்தாய்: ராஜதர்மம் என்ற இன்றியமையாத பாதுகாப்புத் தந்து வந்ததையே தொலைத்து விட்டாய்; விறல் வீரனே: திறமை யெல்லாம் வாய்ந்த வீரனே.]

ஜன்னிக் கோளாறு மேலிடுகிறது; ஆங்காரம் உச்சத்தை அடைகிறது.

"இந்த வில் எத்தனையோ காரியங்களைச் சாதித்தது என்று சொல்லுகிறார்கள். ஆனாலும் யாரோ ஒருவன் உன் மனைவியைக் கொண்டு போய் விட்டான். வில்லுக்கு இதைவிட அவமானமான காரியம் ஒன்றுண்டா?"

தாரம் மற்றொரு —
  வன்கொளத், தன்மையின்
பார வெஞ்சிலை
  தானும் பழுதுற.
நேரின் அன்றிம —
  றைந்துநி ராயுதன்
மார்பின் எய்யவோ
  வில்தொழில் வந்ததே!

[பார வெஞ்சிலை தானும் பழுதுற: பெரிய வீர வில்லுக்கும் கெட்ட பெயர் உண்டாகும் படி; நேரின் அன்றி மறைந்து: எதிர் எதிரே நில்லாமல் ஒளிந்து நின்று; நிராயுதன் மார்பினில் எய்யவோ: ஆயுத மில்லாத ஒருவன் மார்பினில் எய்வதற்காகவோ; வில்த் தொழில் வந்ததே: உனக்கு அபூர்வமாக வில்த்தொழில் கைவந்தது. பேஷ், பேஷ்! — நிராயுதன் மார்பின் எய்யவோ!]

ஆங்காரம் கொதிப்பாய்க் கொதித்து எதிரியைப் பஸ்மீகரம் ஆக்குகிறது. தமிழ் வாக்கின் வேகம் இது!

காந்தி மகான் திருவாக்கு—8

## அந்நிய பாஷை மோகம்

தாய் பாஷையை விட்டுவிட்டு வேறொரு பாஷையில் கல்வி கற்கும் குழந்தைகள் தங்களுடைய பிறப்புரிமையைப் பறிகொடுக்கிறார்கள். சிறு குழந்தைகளுக்கு அந்நியபாஷை போதிப்பது, அவசியம் இல்லாமல் அவர்களைக் கஷ்டப்படுத்துவதாகும்.

ஆங்கிலம் சர்வதேச வர்த்தகத்துக்கு இன்றியமையாத பாஷை. அது ராஜீய விவகாரங்களுக்கு அவசியமானது. அதில் சிறந்த இலக்கியங்கள் பல இருக்கின்றன. மேல்நாட்டு நாகரிகத்தையும் கலைப் பண்பையும் தெரிந்துகொள்ள அது உதவியாக இருக்கிறது. ஆகையால், நம்மில் ஒரு சிலருக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கவேண்டியது அவசியமேயாகும். அவர்கள் ஆங்கிலத்தின் மூலம் நம் நாட்டு வர்த்தகத்தையும் சர்வதேச ராஜீய விவகாரங்களையும் நடத்த முடியும்; மேல்நாட்டு இலக்கியம், விஞ்ஞானம்—முதலியவற்றில் மிகச் சிறந்தவற்றை நம் நாட்டுக்குக் கொடுக்க முடியும்.

ஆங்கிலத்தை அத்துடன் நிறுத்திக் கொள்ளுவதுதான் நியாயம். ஆனால், இன்றோ ஆங்கிலம் நம் இதயத்தின் முக்கியமான பகுதியையே ஆக்கிரமித்துக் கொண்டது; அது நம்முடைய தாய்மொழிகளை எல்லாம் ஒதுக்கிக் கீழே தள்ளிவிட்டது. பிரிட்டிஷ்காரர்களுடன் பொருத்தமற்ற தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதால்தான், இத்தகைய இயற்கைக்கு முரண்பட்ட நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இந்திய மக்கள் ஆங்கில அறிவு இல்லாமலேயே பூரண வளர்ச்சி அடையக் கூடியதாக இருக்க வேண்டும். 'ஆங்கில அறிவு இல்லாவிட்டால், சமூகத்தில் உன்னத நிலைமையில் உள்ளவர்களுடன் பழகமுடியாது' என்று நம்முடைய இளைஞர்களும் பெண்களும் நினைக்கும்படி தூண்டுவது பெருங் கொடுமை. ஆங்கில மோகத்தை ஒழிப்பது சுயராஜ்யத்தின் முக்கிய அம்சங்களில் ஒன்றாக இருக்க வேண்டும். —யங் இந்தியா 2-2-1921.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119. Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

## “எவர்ஸில்வர்”

### பாத்திரங்கள்

வெள்ளியின் அந்தமும் இரும்பின்
உறுதியும் ஒருங்கே கொண்டவை

(பம்பாய் ஜீவன்லால் கம்பெனியாரால்
தயாரிக்கப்பட்டவை)

●

தென்னிந்தியாவிற்குப் பூரண
விநியோகஸ்தர்கள்:

**பார்ஸன் & கோ.,**

எஞ்ஜின், எலக்ட்ரிக் மோட்டார்,
பம்பு செட் டீலர்கள்

8/22, பிராட்வே, மதராஸ்

தந்தி: "BARAPASH"] [போன்: 4521

●

வெளியூரில் கிடைக்குமிடம்:

தென்னார்க்காடு ஜில்லாவிற்கு:
**C. T. சோமையா செட்டியார்**
c/o. Y. PR. KR. ST. பாங்க்
பண்ருட்டி (தென்னார்க்காடு ஜில்லா)

சேலம் ஜில்லாவிற்கு:
**எஸ். வி. ராமநாதன்**
C/0 சூடாமணி ஸ்டோர்ஸ்
தில்லைநகரம், நாமக்கல் (சேலம்)

தஞ்சை ஜில்லாவிற்கு:
**எம். வி. எம். ஸ்டோர்ஸ்**
கும்பேஸ்வரர் சன்னதித் தெரு
கும்பகோணம்

திருச்சி ஜில்லாவிற்கு:
**S. T. P. R. சிதம்பரம்**
63, வடக்குச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்

சித்தூர், செங்கல்பட்டு, வடஆர்க்காடு, திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், மைசூர், ஹைதராபாத் சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் ஏஜென்சி [illegible] எழுதவும்.

---

## நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் கூந்தல்
தைலம்

கூந்தலுக்கு சிறந்த மணமும் மிகுந்த வளப்பும் நிறைந்த வளர்ச்சியும் தருகிறது. [illegible] மக்கள் [illegible] போக்கிப்பதன் உண்மையும் அதுவே





கோகுல் [illegible] கவனித்து வாங்குங்கள்

**டி.எஸ்.ஆர்.&கோ**
**கும்பகோணம்**

மதராஸ் ஏஜண்டு:
**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**
பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு:
**B. பாலபட்டாபி,**
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

S. P. B.

REGD. No. M. 4392




# ராஜா
# ஸ்னோ
# ஹேர் ஆயில்
# கஸ்தூரி சோப்









FAS-10

**MANYAM & CO., BANGALORE * MADRAS * BOMBAY ***

பம்பாய் ஆபீஸ்: 142, ஃப்ரீ ரோடு ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
மெஸர்ஸ். துரை. அருள் & கோ., லிட்., 93, கேய்ஸர் தெரு, கொழும்பு